# Hosiery made of pure GRASIM STAPLE FIBRE

has a better appearance, fuller feel, equal stretch, excellent durability, and high dimensional stability

If you are in the manufacturing line, Grasim Staple Fibre could lead you to bigger Sales, bigger Profits. A slight modification in your knitting methods such as increasing the courses per inch will help you to manufacture firm and compact knitted garments from 100% Staple Fibre.




**THE GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD.**
Birlagram, Nagda (M.P.)

# கல்கி

## பொருளடக்கம்

பிரமாதீச, தை 14 ❊ ஜனவரி 27, '74



மேலட்டை : மலை முகட்டில் மலர் மங்கை

வண்ணப் படம் : உத்தரா



''கல்கி''யில் வெளி வரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்ப வங்களும் கற் பனையே


கல்கி சந்தா விவரம்

| | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| சீமை நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| லங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |




# டெலிராட் விற்பனை நிலையத்திற்கு வருவீர்!
# தரமுயர்ந்த ரேடியோ வாங்குவீர்!

ஒரு டெலிராட் ரேடியோவை வாங்குங்கள். பரிசைப் பெறுங்கள்
விவரங்களுக்கு உங்கள் அருகிலுள்ள டீலரை அணுகுங்கள்

Shilpi-TR 39A.73 Tam

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா --பாரதியார்



மலர் 33 :: இதழ் 26

# சுதந்திரத்தைப் பறிக்கும் தந்திரம்!

**நா**டு சுதந்திரம் பெற்று இருபத்தாறு ஆண்டுகள் முடிவடைந்துவிட்டன. எனினும், ஜனநாயகத்தைச் சிதைந்து போகவிடாமல் பாதுகாக்க மக்கள் உறுதி கொள்ள வேண்டும் என்று அடிக்கடி வற்புறுத்திச் சொல்ல வேண்டியிருக்கிறது. இதற்கு இன்னமும் அவசியம் இருப்பது குடியரசு தின விழாக் கொண்டாடும் இத்தருணத்தில் மகிழ்ச்சி அளிக்கக் கூடியது அல்ல. ஆனால், உண்மை நிலையை மறந்துவிடுவதோ, மறைப்பதோ நாட்டு மக்களின் நன்மைக்கு உகந்ததல்ல. ஆட்சியாளர்கள் அதிகார பலத்தினால் மக்கள் உரிமைகளைச் சின்னாபின்னமாக்குவது ஒருபுறமிருக்க, நாட்டின் சுதந்திரத் தன்மைக்குக்கூட ஊறு விளைவிக்க முற்பட்டிருக்கிறார்களோ என்று சந்தேகிக்கக்கூடிய நிலைமை இன்று தோன்றியுள்ளது.

இந்தியா, ஸோவியத் அரசின் செல்வாக்குக்கு உட்பட்டு வேகமாக அதன் பிடிக்குள் சிக்கிக்கொள்ள விரைந்து கொண்டிருக்கிறதோ என்று இன்றைக்கு நாட்டில் பலர் அச்சம் கொண்டுள்ளனர். காரணமற்ற அச்சம் என்று இதைத் தள்ளிவிடுவதற்கில்லை. சமீபத்தில் நாம் செய்து கொண்ட நட்புறவு உடன்படிக்கையும், பொருளாதார ஒத்துழைப்பு ஏற்பாடுகளும் மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது குறை சொல்ல முடியாதவையே. நாட்டுக்கு நன்மை பயக்கக் கூடியவை என்றுகூடச் சொல்லலாம். ஆனால் சோவியத் நாடு உலக வல்லரசுகளில் முக்கியமானது. அது தனது செல்வாக்கைப் பலவீனமான இதர சுதந்திர நாடுகளில், எந்தெந்த வகையில் முடியுமோ, அந்த வகைகளிலெல்லாம் விஸ்தரித்துக் கொள்ள எண்ணுவது இயற்கையே. இதையும் ராணுவ ரீதியிலும் பொருளாதார ரீதியிலும் பலவீனமான நாடு இந்தியா என்பதையும் கவனத்தில் வைத்துக் கொண்டு, நமது அரசாங்கத்தின் போக்குகளைப் பார்க்கும்போதுதான் அச்சம் ஏற்படுகிறது.

இப்போது திரு கே. டி. மாளவியா, மீண்டும் அமைச்சராக நியமிக்கப்பட்டிருக்கிறார். இவர் ஏற்கனவே நேருவின் காலத்தில் திருப்தியற்ற சூழலில் அமைச்சர் அவையிலிருந்து வெளியேற்றப்பட்டவர். மோகன் குமாரமங்கலம் கம்யூனிஸ்டாக இருந்தவர் என்பதும், அவர் அமைச்சராக்கப்பட்டது ருஷ்யாவின் விருப்பத்துக்கு உகந்தது என்பதும் நாடு அறிந்ததே. அவர் மறைவுக்குப் பின் அவர் ஸ்தானத்தில் அமர, அவரைப் போலவே ருஷ்ய உயர் இடங்களுக்குத் திருப்தியளிக்கக்கூடிய மற்றொருவர் திரு மாளவியாதான். அதனாலேயே அவர் மீண்டும் அமைச்சராக்கப்பட்டிருக்கிறார் என்று எண்ண இடமிருக்கிறது. அவர் சர்ச்சைக்கிடமானவர் என்ற அம்சம் புறக்கணிக்கப்பட்டிருக்கிறது. திரு மாளவியாவுக்கு அளிக்கப்பட்டுள்ள இலாகாக்கள் — பெட்ரோலியம், எஃகுத் தொழில் ஆகியவை — இரண்டும் ருஷ்யாவின் உதவியையே நம்பிச் செயல்பட்டுக் கொண்டிருப்பவை. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு சிந்திக்கும்போதுதான், நாம் சிறுகச் சிறுக, சுதந்திரத்தைப் பறிகொடுத்துக் கொண்டு வருகிறோமோ என்ற எண்ணம் மேலோங்குகிறது.

மற்றொரு கவலை தரும் அம்சம் நாட்டில் ''அபாய நிலைப் பிரகடனம்'' இன்னமும் ரத்துச் செய்யப்படாமல் இருப்பதாகும். யுத்தத்தின்போது தோன்றிய அபாய நிலைமை மறைந்த பின்னரும் அபாய நிலைமைச் சட்டங்களை நீடிக்கச் செய்வது சுதந்திரக் கோட்பாடுகளுக்கு ஒவ்வாதது. இவை அரசினிடம் அபரிமிதமான அதிகாரங்களைக் குவித்துள்ளன.

இந்திரா அரசினிடம் மக்களுக்குள்ள அதிருப்தி சமீபத்திய உபதேர்தல்களின் மூலம் வெளிப்படையாகவே உணர்த்தப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த எதிர்ப்பு பொருளாதாரச் சீரழிவைப் பிரதானமாகக் கொண்டதே தவிர, நாட்டின் சுதந்திரம் மறைமுகமாகப் பறிபோய்க் கொண்டிருக்கும் அபாயத்தை மக்கள் உணர்ந்திருப்பதாய்த் தெரியவில்லை. ஜனநாயகத்தைப் பாதுகாக்க விழிப்புத் தன்மை ஒவ்வொரு பிரஜையிடமும் பூரணமாக இருக்க வேண்டும்.

# தமிழ்நாட்டிலே

தீரன்

## புதுச்சேரிக்காக ஒரு பூச்சாண்டி

புதுச்சேரியில் எந்தவிதமான நம்பிக்கையோடும் தேர்தல் களத்தில் இறங்க முடியாதே என்ற கையாலாகாத்தனத்தினால் தி. மு. க. தலைமை இப்போது வேறு ஒரு பூச்சாண்டியைக் கிளப்பிப் பார்க்கிறது. 'பாண்டிச்சேரியில் மத்திய பல்கலைக் கழகம் அமையும்' என்று சில நாட்களுக்கு முன் பாரத அரசாங்கம் அறிவித்தது அல்லவா? அதைச் சொல்லி, ''இது இந்தியைத் திணிக்கும் முயற்சி. அங்கு பல்கலைக் கழகம் அமைக்கப்பட்டால் மத்திய கல்வித் துறையினரால் இந்தி பாட மொழியாக்கப்பட்டு விடும். அதாவது நமக்குப் பக்கத்தில் இந்தியை அவர்கள் கொண்டு வந்து உட்கார வைத்து விடுவார்கள். ராணுவப் படையெடுப்புக்குத் தளம் அமைப்பது போல் இந்தி ஆதிக்கப் படையெடுப்புத் தளமாகவே மத்திய அரசு புதுவைப் பல்கலைக் கழகம் அமைக்கிறது'' என்று கூறியுள்ளார். கலைஞர் காட்டுகிற இந்தத் தேர்தல் பூச்சாண்டிக்கும் பாண்டிச்சேரிக்கு வரவிருக்கும் பல்கலைக் கழகத்துக்கும் சம்பந்தமே இல்லை என்பதை மறுதினமே சென்னைக்கு வந்த மத்திய உள்துறை துணை மந்திரி ராம்நிவாஸ் மிர்தா விளக்கிக் கூறி விட்டார். ''மத்திய அரசின் ஆதிக்கத்தின் கீழ்ப் புதுவையில் பல்கலைக் கழகம் ஏற்பட்டாலும் 'இந்தித் திணிப்பு' என ஒன்றும் இராது'' என்பதாகத் தமிழக முன்னாள் முதல்வர் பக்தவத்சலமும் விளக்கியிருக்கிறார். வெள்ளத்தில் விழுந்து தத்தளிப்பவன் கரை ஏற எந்தத் துரும்பாவது பற்றிக் கொள்ளக் கிடைக்காதா எனத் தேடித் தவிப்பது போல் வெகுஜன எதிர்ப்பு — அதிருப்தி என்ற வெள்ளத்தில் விழுந்து தத்தளிக்கும் தி. மு. க., இந்தி எதிர்ப்பு என்னும் துரும்பைத் தேடிப் பற்றிக் கரையேற முயல்கிறது.

## மருத்துவ மனைகளில் சிபாரிசா?

அண்மையில் கோவையில் நடைபெற்ற இந்திய மருத்துவ சங்க 27வது மகாநாட்டின் தலைமை உரையில் மருத்துவ சங்கத் தமிழ்நாடு கிளையின் தலைவர் டாக்டர் ராமா ராவ், மருத்துவ மனைகளின் பணிகளில் சட்டசபை, பாராளுமன்ற உறுப்பினர்கள் அநாவசியமாகக் குறுக்கிட்டுத் தொல்லை கொடுப்பது பற்றி வருத்தப்பட்டிருக்கிறார்.

''அரசாங்க மருத்துவ மனைகளில் விசேஷ கவனமும் விசேஷ சிகிச்சையும் தங்களுக்கும், தங்களுக்கு வேண்டியவர்களுக்கும் மட்டுமே தரப்பட வேண்டும் என்று சமீப காலமாகச் சட்டசபை உறுப்பினர்களும், பாராளுமன்ற உறுப்பினர்களும் தான்தோன்றித்தனமாக வந்து வற்புறுத்துகிறார்கள். இத்தகைய வற்புறுத்துதலுக்கு மருத்துவரோ அதிகாரிகளோ செவிசாய்க்கத் தவறினால் தாக்குதல், உடனே டிரான்ஸ்பர் செய்வது போன்ற பழி வாங்கும் நடவடிக்கைகளுக்கு அவர்கள் ஆளாகின்றனர். இதனால் மருத்துவ மனைகளின் அமைதியான பணி சீர்குலைகிறது'' என்று கூறியுள்ளார்.

சிகிச்சை, உயிரைக் காப்பாற்றுதல் இவற்றில் சலுகை — சலுகையின்மைக்கு இடமே இல்லை. மருத்துவரின் பார்வையில் எல்லா உயிர்களுமே பெரிதுதான். எம். எல். ஏ., எம். பி.க்களுக்கு இதுகூடவா தெரியவில்லை?

## போலி டிக்கெட்

சென்னை பல்லவன் போக்குவரத்தில் ஒரே ஸீரியல் எண்ணுள்ள பல டிக்கெட்கள் ஒரே நாளில் வழங்கப்பட்டிருப்பதை அந்த டிக்கெட்டுகளை வாங்கியவர்கள் புகார் செய்து பத்திரிகைகளுக்கு எழுதியிருக்கிறார்கள். படங்கள் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டுள்ளன.

இந்த நிலையில் போலி ரயில் டிக்கட்டுகளையே தாராளமாக அச்சிட்டு வழங்கிய குற்றத்துக்காகத் திருச்சியில் ஒரு ரயில்வே அச்சக ஊழியர் கைதாகியிருக்கிறார். தாம் வேலை பார்த்து வந்த ரயில்வே அச்சகம் தவிர வீட்டிலும் ஒரு சிறு அச்சகமே இவரிடம் இருந்ததாம்.

வரவர நம் நாட்டில் நோட்டு அடிப்பவர்கள், டிக்கட் அடிப்பவர்கள் எல்லாம் மலிந்து விட்டனர். இவை அதிகரிக்க அதிகரிக்க அரசினிடம் மக்களின் நம்பிக்கை குறைந்துகொண்டே போகும்.

## கோட்டை அவசியம்தானா?

தமிழ்நாடு அரசுக்கு இதுவரை வேறு யாருக்கும் தோன்றாத விநோதமான யோசனை ஒன்று தோன்றியிருக்கிறது. கட்டபொம்மன் வாழ்ந்த — ஆண்ட — பாஞ்சாலங்குறிச்சியில் அவன் நினைவாக ஏராளமான பணச் செலவில் ஒரு கோட்டையைக் கட்டுவது என்ற யோசனைதான் அது. நாளை மதுரையில் பாண்டியனுக்காக இப்படி ஒரு கோட்டையையும், தஞ்சையில் சோழனுக்காக ஒரு கோட்டையையும், பறம்பு மலையில் பாரிக்காக ஒரு கோட்டையையும் கட்டும் ஆசை அரசாங்கத்துக்கு வரலாம். ஆனால் நாட்டில் இப்போதுள்ள சிரமமான, சிக்கலான பொருளாதார நிலையில் இவ்வாறான செலவுகள் அவசியமா? பரிசீலிக்கத் தக்கதாகவே முடியும்.

## சுற்றுலாக் காட்சி

வெளிநாட்டு உல்லாசப் பயணிகளைக் கவர்வதற்கு என்றே (இந்தியன் ஏர்லைன்ஸ் தகராறுகளால் வெளிநாட்டுப் பயணிகளின் இயக்கமே பாதிக்கப்பட்டுள்ளது) சென்னையில் தமிழ்நாடு சுற்றுலா வாரியம் ஏற்பாடு செய்துள்ள 'பொங்கல் சுற்றுலாக் காட்சி'யில் வெளிநாட்டினர் தரத்துக்கு ஏற்ற எதுவுமே இல்லை. சித்திரைத் திருவிழாப் பொருட்

காட்சிபோல் இதிலும் பல கடைகள், குடை ராட்டினம், ஐயனார் சிலைகள், சில கலை நிகழ்ச்சிகள் மட்டுமே உள்ளன. கரகம், காவடி வகையறாவும் உண்டு.

ஆனால் இந்தச் சாதாரணமான பொருட்காட்சிக்குச் செய்யப்பட்டிருக்கும் அசாதாரணமான விளம்பரங்கள்தான் நம்மைத் திகைக்கச் செய்கின்றன. வெறும் கடைகளும் சில கலைநிகழ்ச்சிகளும் மட்டுமே சுற்றுப் பயணிகளைக் கவர்ந்துவிட முடியாது. அதற்கான தரமும் ஏற்பாடும் இன்னும் சீரிய முறையில் இருக்க வேண்டும். நாலு ஊது பத்திக் கடைகளும், இரண்டு பட்டுப் புடவைக் கடைகளும் நகரில் வேறு எங்குதான் இல்லை?

## சட்டையைக் கிழித்த அதிகாரி

தமிழ்நாடு அரசின் விற்பனை வரி அதிகாரிகள் செய்த, அளவுக்கு அதிகமான கெடுபிடியினால் ஒரு வியாபாரியின் சட்டை கிழிந்த செய்தி பத்திரிகைகளில் பரபரப்பாகப் பிரசுரமாகியிருக்கிறது. சென்னை பார்க் டவுன் பகுதியில் உள்ள ஓர் எவர்சில்வர் பாத்திரக் கடைக்கு விற்பனை வரித் துறையின் உஷார்ப் பிரிவைச் சேர்ந்தவர்கள் என்று கூறிக் கொண்டு சுமார் முப்பது நாற்பது பேர் வந்தார்களாம். கடை கணக்குப் பேரேட்டைக் கேட்டார்களாம். கடைக்காரர் தரத் தயங்கியிருக்கிறார். பின்னர் கைகலப்பு நேர்ந்துள்ளது. அதிகாரிகள் கணக்கு நோட்டுகளைத் தாறுமாறாகக் கடைக்குள் வீசி எறிந்தார்களாம். அதே பகுதியிலிருந்த அவருடைய பிற நிறுவனங்களையும் சோதித்த பின் அந்த வியாபாரியின் வீட்டையும் சோதித்ததாகத் தெரிகிறது. இறுதியில் அந்த வியாபாரியின் சட்டைப் பையில் இருந்த ஒரு டைரியை 'அதிகாரிகள் கேட்டபோது அவர், ''இதில் வியாபார சம்பந்தமாக எதுவும் இல்லை. என் சொந்த விஷயங்களும், குடும்பச் சமாசாரங்களும் மட்டுமே எழுதப்பட்டிருக்கின்றன'' என்று கெஞ்சியிருக்கிறார். உடனே பலவந்தமாக அவருடைய சட்டை கிழியும்படி அந்த டைரி பிடுங்கப்பட்டதாம். பின்னர் அந்த வியாபாரி கைது செய்யப்பட்டிருக்கிறார்.

இந்த அத்துமீறிய கெடுபிடியைக் கண்டித்து அப்பகுதி வியாபாரிகளும், பிறரும் மறுநாள் தங்கள் கடைகளை அடைத்து ஹர்த்தால் நடத்தியுள்ளனர்.

அதிகாரிகள் குத்துச் சண்டை வீரர்களாக மாற வேண்டியதில்லை. அரசுக்கு வரி மூலமாக வாரி வழங்குகிற காமதேனுக்களை அரசு இன்னும் சிறிது கௌரவமாக அணுகலாமே?

## ஹரிகதை அரசி

ஹரிகதைத் துறையில் சக்கரவர்த்தினியாக விளங்கிய ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அவர்களின் வாழ்க்கையே ஓர் அரிய கதை. அறுபத்தைந்தாண்டுகளுக்குமுன் ஒரு பதினைந்து வயதுப் பெண் - மணமான அந்தணப் பெண் - மேடையேறி ஹரிகதா காலக்ஷேபம் செய்ய முற்பட்டபோது அதற்கு ஏற்பட்ட ஆட்சேபணையைச் சொல்லி முடியாது. ஆனால் அந்த இளம் பெண் இதற்கு அஞ்சவில்லை.

**வால் நட்சத்திரத்தின் விளைவு?**







எதிர்ப்பை எதிர்த்துப் 'புரட்சி' செய்யவும் இல்லை. தன் பாட்டில் ஹரிகதை செய்து கொண்டேயிருந்தாள். காலக் கிரமத்தில் எதிர்ப்பு தானாகவே பிசுபிசுத்துப் போகத் தொடங்கியது. முன்பு எதிர்த்தவர்களும் கூடப் பிற்பாடு, ''இவள் பாரத தர்மத்தை முறிக்கவில்லை; மாறாகப் பாரத தர்மத்தையே தான் தன் கதைகளால் பிரசாரம் செய்கிறாள்'' என்று வியந்து பாராட்டினர். உயர்ந்த சங்கீதம், வளமான சாரீரம், கதையை நாடகமாகவே ஆக்கிப் பல பாத்திரங்களாகவும் மாறி வெவ்வேறு ரஸ பாவங்களைக் கொட்டும் சதுரம், இவற்றோடு உண்மையான பக்தியும், தமது குருவான கிருஷ்ணாசாரியரிடம் கொண்டிருந்த விநய விசுவாசமும் சேர்ந்து சரஸ்வதிபாய்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பீட்டித் தந்தன. தமிழ், கன்னடம், தெலுங்கு, மராத்தி, ஹிந்தி ஆகிய எல்லா மொழிகளிலும் ஹரிகதை செய்யும் மேதை பெற்றிருந்தாலும், சம்ஸ்கிருதத்தில் இவருக்கிருந்த தேர்ச்சி காரணமாகவும் இந்தியா மட்டுமின்றி அண்டை நாடுகளிலும் காலக்ஷேபம் நிகழ்த்திப் பெரும் பாராட்டுப் பெற்றிருக்கிறார். பத்தொன்பது வயது மங்கையாக இருந்த போதே சங்கீத மகாத்மாவான விஷ்ணு திகம்பரால் 'காயனபடு' (இசை நிபுணி) எனப் போற்றப்பட்டார்; இருபத்து நாலாவது வயதில் லோகமான்ய திலகரால் 'கீர்த்தன படு' (கதாகாலக்ஷேப நிபுணி) என வாழ்த்தப் பெற்றார். ராஜாஜிக்கு இவரது நந்தன் சரித்திரத்தில் தனித்ததோர் ஈடுபாடு உண்டு. ஐம்பதாண்டுகளுக்கு மேலாக நாடெங்கும் வெற்றிக் கொடி நாட்டிய போதிலும் அகங்காரம் சிறிதும் இல்லாமல் இனிக்கப் பழகும் பாங்கு பெற்றவர் ஸ்ரீமதி சரஸ்வதி பாய். அவரது வெள்ளையான உள்ளத்தையும் ஹரிகதைகளினூடே கண்டு கொண்டு அநுபவித்த ரஸிகர்களுக்கு அவரது பிரிவு என்றென்றும் ஈடு செய்ய இயலா இழப்பாகவே இருக்கும்; தனிப் பண்பு கொண்ட ஓர் அத்தியாயம் முடிந்தது என்று ஏக்கப் பெருமூச்சு விடவே செய்வர்.

## நிறுவை சரியில்லை

'இந்தியன் கவுன்சில் ஆஃப் கன்ஸ்யூமர்ஸ்' (இந்திய உபயோகிப்போர் குழு) தி. நகர் கிளை சமீபத்தில் ஒரு நல்ல காரியத்தைச் செய்தது. நியாய விலைக் கடைகளில் வாடிக்கைக்காரர்களுக்கு நிறுத்து அளிக்கப்படும் பண்டங்களின் எடை சரியில்லை என்ற புகாரைக் கருத்தில் கொண்டு தியாகராயநகரில் உள்ள ஓர் அரசு நியாய விலைக் கடை முன் இந்தக் கவுன்சிலைச் சேர்ந்த இளைஞர் சிலர் தாங்களே கொண்டுபோயிருந்த ஒரு நிறுவைக் கருவியுடன் நின்று கடைக்குள்ளிருந்து பொருள் வாங்கி வரும் வாடிக்கைதாரரின் பொருள்களை மறுபடியும் நிறுத்துக் காட்டி உதவினார்கள்.

இப்படி இவர்கள் இரண்டு மணி நேரம் நிறுத்துச் சோதனை செய்ததில் 18 பேர்கள் வாங்கி வந்த பண்டங்களில் 50 முதல் 250 கிராம்வரை கடைக்காரரால் குறைத்து நிறுத்து மோசடி செய்திருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. பண்டம் வாங்கி வந்தவர்களில் பலர் இதனால் விழிப்படைந்து கடைக்குள் போய் நியாயம் கோர வழி பிறந்தது. உபயோகிப்போர் ஒற்றுமை உருவாகி இப்படிப்பட்ட பணிகள் வளருமானால் மக்களை எந்த வியாபாரியும் ஏமாற்ற முடியாது.

## குருகுல தர்ம ஆசாரியர்

இறைவனோடு கலந்துவிட்ட கே. ரங்கசாமி ஐயங்கார், கல்விப் பணிக்காகவே தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர்.

மன்னார்குடிக்கு அருகில் குறிச்சி என்னும் கிராமத்தில் 1888ம் ஆண்டு பிறந்த அவர் வழக்குரைஞர் தொழிலுக்குப் படித்துத் தேர்ச்சி பெற்றார். ஆனால் அவரது மனத்துக்கிசைந்த தொழில் ஆசிரியத் தொழில். அதை ஒரு பணியாக ஏற்று, சென்னை ஹிந்து தியாலாஜிகல் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியர் ஆனார். பின்னர் அதன் தலைமை ஆசிரியராகி 1944 வரை புகழ் சேரப் பணியாற்றினார். அப்பள்ளியைக்குருகுலமென நடத்திக் கல்வித் தொண்டுக்கு முன்னோடியாகத் திகழ வைத்துப் பெருமை பெற்றார்.



தலைமை ஆசிரியர் பொறுப்பி லிருந்து ஓய்வு பெற்றாலும் அவரைக் கல்வித் தொண்டு ஓய்வு பெற விடவில்லை. ஸ்ரீ. பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் அவர்கள், லேடி சிவஸ்வாமி ஐயர் பெண்கள் உயர்நிலைப் பள்ளியை நிர்வகிக்கும் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தார்.

இறுதி மூச்சுவரை கல்வித் தொண்டையே தம் உயிர்நாடியாகக் கொண்டு செயலாற்றிய ஐயங்காரின் ஆக்கபூர்வமான ஆலோசனைகள் கல்வித் துறைக்குக் கிட்டியது.

கல்வியறிவு பெறுவதை ஒரு சுமையாகக் கருதாமல் மாணவர்கள் மகிழ்ச்சியோடு ஈடுபடக் காரணமாயிருந்த ரங்கஸ்வாமி ஐயங்கார் மெய்யாகவே எழுத்தறிவித்த இறைவன் ஆவார்.

## போதும் இந்த அனுதாபம்!

தமிழக ஆளுநர் தமது சட்டசபைப் பேருரையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

''கூட்டுறவுத் துறையைச் சேராத நெசவாளர்களுக்குப் போதுமான அளவு நூல்







# பல்கலைக் கலகம்!

வழங்கும் பிரச்னை தொடர்ந்து கவலையளிப்பதாக உள்ளது!''

முன்பு காங்கிரஸ் ஆட்சி இருந்தபோது தி. மு. க.வினர் கைத்தறி நெசவாளர்களின் பிரச்னையைத் தாங்கள் பதவிக்கு வந்தால் உடனே கவனிப்பதாகச் சொன்னார்கள். நிரந்தர பரிகாரம் அளிக்கப் போவதாக வாக்குறுதி யளித்தனர். தாங்கள் நெசவாளர்களின் உற்ற நண்பர்கள் என்பதைக் காட்டிக் கொள்ள, தாங்கள் பேசும் கூட்டங்களில், மலர் மாலைகளுக்குப் பதில் கைத்தறி ஆடைகளை வாங்கி அளிக்க வேண்டும் என்று தம்பிமார்களுக்கு வேண்டுகோள் விடுத்தார்கள்.

ஆட்சிக்கு வந்ததும் கைத்தறி ஆடைகளுக்குப் பதில் ஆளுயரத்துக்கு மலர் மாலைகளும் மலர்க் கிரீடங்களும் தி. மு. க. மந்திரிகளும் தலைவர்களும் சூடிக்கொள்ள முற்பட்டனர்.

இப்படிச் சொன்னால், ஆளும் கட்சியினர் தாங்கள் பதவிக்கு வந்த பின் எத்தனை புது கூட்டுறவுச் சங்கங்கள் தொடங்கப்பட்டன, எத்தனை கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டது, எத்தனை கோடி ரூபாய் கைத்தறித் துணி விற்பனையில் தள்ளுபடி வழங்கத் தரப்பட்டிருக்கிறது என்று புள்ளிக் கணக்குக் காட்டுவர். புள்ளிக் கணக்குப் பள்ளிக்கு உதவாது என்பது பழமொழி.

கூட்டுறவுச் சங்கங்களுக்குச் செலவழிக்கப்பட்ட பணம் பெரும் பகுதி கட்சி சார்புடைய கூட்டுறவுச் சங்கத் தலைவர்கள், நெசவாளர்கள், தரகர்கள் ஆகியவர்களின் பைகளை நிரப்பத்தான் உதவியிருக்கும். உண்மையான நெசவாளிகள் சிறிதளவே பயன் அடைந்திருப்பர்.

கவர்னர் உரையில் அரசாங்கமே ஒத்துக் கொண்டதுபோல், கூட்டுறவுத் துறைக்கு வெளியே இருக்கும் நெசவாளர்களின் தொகைதான் ஏராளம். அவர்கள் கஷ்டம் தான் நெஞ்சத்தை உருக்கக் கூடியது. அவர்களுக்கு நிரந்தரமான கஷ்ட நிவாரணம் அளிக்க ஒரே வழி ராஜாஜி கூறிவந்ததுபோல் கரை போட்ட வேஷ்டிகளையும் புடவைகளையும் கைத்தறிகளுக்கு மட்டுமே என்று ஒதுக்குவதுதான். இதைச் சட்டபூர்வமாக அமல் செய்யுமாறு மத்திய அரசாங்கத்தை வற்புறுத்த வேண்டும். வெறும் அனுதாப வார்த்தைகளால் ஒரு பயனுமில்லை.

## சுடுகாட்டில் லஞ்ச ஒழிப்பு

எங்கும் எதிலும் லஞ்சம் என்றிருந்த நிலை இப்போது கார்ப்பரேஷன் கலைக்கப்பட்டுத் தனி அதிகாரியின் பொறுப்பில் வந்தவுடன் பெரிய அளவில் குறைந்திருக்கிறது.

சென்ற வாரம் நகரத்தில் மாநகராட்சியின் கீழுள்ள ஒரு மயானத்துக்கு முன் அறிவிப்பின்றித் திடீரென்று கார்ப்பரேஷன் தனி அதிகாரி போயிருக்கிறார். அதிகத் தொகை கேட்ட ஒரு வெட்டியானை அங்கேயே, அப்போதே சஸ்பெண்டு செய்துவிட்டு வேறொரு வெட்டியான் மூலம் அங்கு வந்த ஒரு பிரேதத்தை எரிக்க ஏற்பாடு செய்து கொடுத்திருக்கிறார். இப்படி ஒவ்வொரு துறையிலும் லஞ்ச ஊழலை ஒழிக்கும் நடவடிக்கையில் அதிகாரிகள் இறங்கினால், மக்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும்!

குன்றுப்
புதுமைக்கும்
குறையா வனப்புக்கும்
லக்ஷ்மியின்

# ஸ்ரீ

செமி ஃபுல்
வாயில் புடவைகள்
100% சுத்தமான எகிப்து
பஞ்சு கொண்டு செய்யப்பட்டது



தி
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயமுத்தூர்

உயர்ந்த துணிகளின்
உன்னத சின்னம்

VSK AND CO.LMC.6DO.TM

# ராஜாஜி சிந்தனை



ஒவ்வொரு நாளும் பாபு உயிர்துறந்த நேரத்தில் நம்முடைய நினைவில் அவர் இடம் பெறட்டும். நமது அன்புக்குரிய குரு, நமது அஜாதசத்ரு, நமது சத்திய பராக்கிரமர், எண்ணற்ற பேர்களுக்கு நோய் தீர்க்கும் மருத்துவர் போல் இருந்த மகான், பயத்தைப் போக்கி அன்பை வளர்க்கப் பாடுபட்ட பாபுவை நினைப்போம்.

ஒவ்வொரு நாளும் மாலை ஐந்து மணிக்கு இந்தியாவிலுள்ள ஆண் பெண் அனைவரும் பிரார்த்தனைக் கூட்டத்தில் குழுமியிருந்த மக்களை நினைவுபடுத்திக் கொள்ளட்டும். அவருடைய இனிய முகத்தை மனத்தில் எண்ணி, அவர் எதற்காகப் பிரார்த்தனை செய்து வந்தாரோ, அதனைச் சிந்தித்துப் பார்க்கட்டும். ஒவ்வொரு நாளும் அந்தி நேரத்தில் சில நிமிஷங்கள் சிந்தனையில் செலவிட்டு மௌனமாகப் பிரார்த்தனை செய்வோமாக.

அவருடைய உபதேசங்களைப் பின்பற்றி நடக்காமல் உபதேசித்தவருடனேயே அவருடைய உபதேசத்தையும் மறைந்து போகும்படி விட்டு விட்டால் நாம் வீழ்ச்சி அடைவோம் என்பது மட்டுமல்ல; அவரைக் கொன்றவனுக்கு உடந்தையாகவும் ஆகி விடுவோம். இதயபூர்வமாக அவர் காட்டிய வழியில் நடந்தால் அவர் நமக்கு இறந்தவராக மாட்டார். நம்மிடையே நம் மூலம் அவர் வாழ்வார். ஒவ்வொரு நாளும் நமது தலைவர் பிரார்த்தனை செய்ததையும், கூடியிருந்தவர்கள் அவருடன் சேர்ந்து பாடியதையும் நினைவுபடுத்திக் கொள்வோம்.

'' ஈசுவர அல்லா தேரே நாம்
சப்கோ சன்மதி தே பகவான் ''

* * *

மிருக பலமும் பலாத்காரமும் உலகில் எதையும் சாதித்துவிடாது என்பது சந்தேகமற நிரூபிக்கப்பட்டுவிட்டது. இந்த ஓர் உண்மை போதும் அவரை எந்நாளும் மறக்க முடியாமல் அவர் நினைவைப் பசுமையாக வைத்திருப்பதற்கு. அவர் உலக மகான்களின் வரிசையில் சேர்ந்துவிட்டார். மனு, புத்தர், ஸோக்ரதர், ஏகநாதர் போன்றவர்களுடன் சேர்ந்து விட்டார். அவர்மட்டு மில்லை என்றால், அந்த மகான்களுக்கும் ரிஷிகளுக்கும் நமக்கும் தொடர்பே அற்றுப் போயிருக்கும்.

* * *

நாம் மகாத்மாவை மறந்து விட்டோமா? — இல்லை; அவரை அலட்சியப்படுத்துகிறோம். இது மறப்பதை விடக் கேவலம்.

* * *

நாம் வாழும் இந்த யுகத்தில் காந்திஜி ஒரு மாபெரும் அரசியல் போராட்டம் நடத்திக் கொண்டே தமக்கே உரிய முறையில் கடமையையும் கடவுள் பக்தியையும் புகட்டினார். நம் நாட்களில் கீதை அவர் வாய்மொழிகள் மூலமாகத்தான் புனர்ஜன்மம் எடுத்தது. நாம் கீதையின் வார்த்தைகள் மட்டும் உச்சரிப்பதோடன்றி, அவற்றின் பொருளுணர்ந்து, போதனையுணர்ந்து நடப்போமாக!

* * *

நாம் ஒவ்வொருவரும் பரஸ்பரம் அன்புடன் வாழ வேண்டும் என்ற நல்லறிவை நமக்கு அருளுமாறு மகாத்மா காந்திஜி தாம் வாழ்ந்த ஒவ்வொரு நாளும் இறைவனிடம் பிரார்த்தித்துக் கொண்டார். நாம் அனைவரும்—ஆண், பெண், குழந்தைகள் உள்பட — ஒருவரை யொருவர் நேசிக்கவே இவ்வுலகில் பிறந்திருக்கிறோம். முட்டாள்கள்தான் துவேஷிக்கிறார்கள். காந்திஜி தமது இறுதி மூச்சு வரையில் இதைத்தான் போதித்தார்.

# "நாகரீக நங்கைகள் மிகவும் புத்திசாலிகள்"

(அவர்கள் ப்ரூ வாங்குகிறார்கள்)

சுமார் முணேகால் ரூபாய்க்கு 30 கப்புகளுக்கு
மேல் ஸ்ட்ராங்கான காபி
கிடைப்பதாக என் மருமகள் பத்மா
சொன்னபோது நான் ஆச்சரியமடைந்தேன்.

**ஒவ்வொரு கப் ப்ரூவுக்கும் வறுத்து அரைத்த சிறந்த காபியின் விலையைவிட அதிகமில்லை**

தலைமுறை தலைமுறையாக நாங்கள் காபித் தூளையே உபயோகித்து வருகிறோம்.

இப்பொழுது இன்ஸ்டண்ட் காபிகளில் ப்ரூ ஒன்றையே விரும்பி சாப்பிடுகிறோம். ஏனென்றால் ப்ரூவின் ருசி சிறந்த காபியின் ருசியே தான். ப்ரூ ஸ்ட்ராங்கானது, திடமானது, சிறந்த மணம் கொண்டது. அனைத்தையும்விட என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது அதன் நயமான விலையே.

அவசரத் தேவைக்கு ப்ரூ ரொம்பவும் சௌகரியமானது. ஆறிய டிகாக்ஷனை சூடுபண்ண வேண்டியதில்லை. சேதமுமில்லை.

தற்காலப் பெண்கள் கெட்டிக்காரர்கள். என் பத்மா அறிவாளியும்கூட.

**ப்ரூ ருசி சிறந்த காபியின் ருசி**




OAM-330/C/3 TAM

# காமாக்ஷியின் சரிதை 2

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகள்

**தா**ரகாசுரன், சூரபத்மன் போன்ற அசுரர்கள் மூன்று லோகங்களையும் ஹிம்சித்து வந்தார்கள். இவர்கள் நிரம்பத் தபஸ் பண்ணி எல்லையில்லாத பலம் பெற்றிருந்தார்கள். சாக்ஷாத் பரமேச்வர தேஜஸிலிருந்து உண்டான குமாரன்தான் தங்களை வதம் செய்ய முடியும் என்று இவர்கள் வரம் வாங்கிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பரமேச்வரனோ இப்போது பரம ஞான மூர்த்தியாக, எந்தக் காரியமும் இல்லாமல், ஆத்மானந்தத்தில் முழுகிக் கொண்டு தக்ஷிணாமூர்த்தியாக உட்கார்ந்து விட்டார்.

இவரை எப்படிப் புத்திரோத்பத்தி செய்ய வைப்பது ?

அசுரர்களால் ஹிம்சிக்கப்பட்ட தேவர்களுக்கு ஒரே வழிதான் தெரிந்தது. அப்போது ஹிமய பர்வத ராஜனுக்குப் புத்திரியாகப் பிறந்த பார்வதி தேவி இந்த தக்ஷிணாமூர்த்திக்குக் கைங்கரியம் செய்து வந்தாள். காமத்துக்கு அதிதேவதையான மன்மதன், பார்வதியிடம் பரமேச்வரனின் மனசைத் திருப்பிவிட்டால் பிறகு சிவகுமார ஜனனம் ஏற்படும் என்று தேவர்கள் எண்ணினார்கள். மன்மதனிடம், 'உன் சக்தியைப் பரமேச்வரனிடம் காட்டு' என்று ஏவி விட்டார்கள்.

லோகம் முழுக்க ஸ்வாதீனம் பண்ணிக் கொள்கிற ஆற்றலை மன்மதனுக்குத் தந்ததே பரமேச்வர சக்திதான். இவன் அந்தப் பரமேச்வரனிடம் பக்தியோடு போய்த் தன் சக்தியை அவரிடம் அர்ப்பணம் பண்ணியிருந்தாலே போதும், கருணாமூர்த்தியான அவர் காரியத்தை முடித்துத் தந்திருப்பார். ஆனால் இவனோ அந்தச் சமர்ப்பண புத்தி இல்லாமல், அகங்காரத்தோடு போனான். பரமேச்வரனையே தன்னால் வசப்படுத்திப் பார்வதியிடம் மோஹிக்கச் செய்ய முடியும் என்று அசம்பாவப்பட்டுக் கொண்டு போனான். பெற்ற தாயிடமே கற்ற வித்தையைக் காட்டுவதுபோல் பரமேச்வரன் மேல் மலர் அம்புகளை விட்டான்.

சட்டென்று ஸ்வாமிக்கு ஒரு சலனம் உண்டாகிறாற் போல் இருந்தது. கண்ணைத் திறந்தார். அவருக்கு மூன்று கண்கள். ஆனால் இப்போது மூன்றுக்கும் வேலை வைக்கவில்லை. அக்னி மயமான நெற்றிக் கண்ணை மட்டும்தான் துளித் துளி திறந்தார். அவ்வளவுதான்; மன்மதன் அக்னி ஜ்வாலையான அந்தத் திருஷ்டியில் அப்படியே எரிந்து பஸ்மமாகிவிட்டான். 'தான் மகா அழகன்' என்ற கர்வம் அவனுக்கு உண்டு. சரீர சௌந்தரியம் ஞானக்கினியின் முன்னால் நிற்க முடியாது என்று காட்டுகிற மாதிரி இப்போது பரமேச்வரன் முன்னால் சாம்பல் குவியலாகிவிட்டான். எவன் சர்வாங்க சுந்தரன் என்று பேர் பெற்றிருந்தானோ, அவனுக்கு இப்போது அங்கமே இல்லாததால் அனங்கன் என்று பேர் ஏற்பட்டது.

மன்மதனின் பத்தினியான ரதி புலம்பினாள். பார்வதி தேவி அவளுக்கு அபயம் தந்து அவள் கண்ணுக்கு மாத்திரம் மன்மதன் தெரியும்படியாக அநுக்கிரகித்தாள். மன்மதனைப் பார்த்து, "நான்தான் உனக்கு இந்த வில்லையும் அம்பையும் தந்து சகல ஜீவராசிகளையும் காம வசப்படுத்தும்படி அநுக்கிரகம் செய்தேன். இப்போது இருக்கிற எல்லோரும் ஸநகாதி முனிவர்களைப் போல் ஞானிகளாக இருந்துவிட்டால், ஏராளமான கர்மா பாக்கியோடு மரணம் அடைந்து இன்னமும் ஜனனம் எடுக்காமல் இருக்கிற ஜீவாத்மாக்களுக்குப் பெரிய கஷ்டம் உண்டாகும். அவர்கள் மறுபடியும் ஜன்மா எடுத்தால்தான் சித்தசுத்தி செய்து கொண்டு, கர்மாவைத் தீர்த்துக் கட்டிவிட்டு, ஜனன நிவிருத்தி பெற முடியும். இதற்காகத்தான் லோகத்தில் பிரஜா உற்பத்தி நடக்க வேண்டும் என்று உனக்குச் சக்தி தந்து உன்னை ஓர் அதிகாரியாக வைத்தேன். ஆனால் நீ இப்போது எனக்கும் மேலதிகாரியிடமே உன் கை வரிசையைக் காட்டிவிட்டாய். சக்தியைக் காட்டிப் பிரயோஜனம் இல்லை; பக்திக்குத்தான் அவர் வசப்படுவார். அவரிடம் எப்படிக் காரியம் நடத்திக் கொள்வது என்று இப்போது பார்" என்று அம்பாள் சொல்லிவிட்டு, அவனுக்குத் தந்திருந்த கரும்பு வில்லையும், புஷ்ப பாணங்களையும் தானே கைகளில் எடுத்துக் கொண்டாள். ஈச்வரனிடத்திலே போய் நின்றாள். ஒரே அன்பு மயமாக அவரைப் பார்த்தாள். கரும்பு வில்லும், மலரம்பும் தரித்து, இப்படி அன்பு பொங்கப் பார்த்தபோதுதான் அவளுக்குக் காமாக்ஷி என்று பெயர் வந்தது.

'காமக் கண்ணி' என்று இந்தக் காமாக்ஷி நாமம் தமிழிலும் தொன்றுதொட்டு இருந்து வந்திருக்கிறது. சங்க காலப் பெண் புலவர் ஒருத்திக்குக் 'காமக் கண்ணியார் நப்பசலையார்' என்று பெயர். காமாக்ஷி வழிபாடு தமிழ் நாட்டில் ஆதி காலத்திலேயே இருந்ததால்தான் அந்தப் பெண்மணிக்கு இப்படிப் பெயர் இருக்கிறது.

மன்மதன் பரமேச்வரன் மேல் பாணப் பிரயோகம் செய்தான். எதிராளியாகப் போர் செய்தான். அம்பாளோ வில் கரும்பையும், அம்புப் புஷ்பங்களையும் ஈச்வரனுடைய பாதத்தில் அர்ப்பணம் செய்து, நமஸ்கரித்தாள்.

இவளுடைய அன்பு ததும்புகிற கண்களைக் கண்டவுடனேயே அவருக்கும் அன்பு சுரந்தது. பஞ்ச இந்திரியங்களாலும், மனசாலும் ஜீவ சமூகத்தை எல்லாம் ஆட்டிப் படைக்கும் மகாசக்தி படைத்த இவள், அந்த சக்திக்கு அடையாளமான ஐந்து பூக்களையும், கரும்பையும் அவர் முன் போட்டுவிட்டு நமஸ்காரம் செய்தவுடன் ஈச்வரனுக்குப் பிரேமை பொங்கியது.

பிறகு பார்வதி கல்யாணம் – அதன் பின் குமார சம்பவம் – முருகக் கடவுளின் உற்பத்தி – அப்புறம் சுப்பிரமணியரால் தாரகாதிகளின் சம்ஹாரம் எல்லாம் நடந்தன.

# இளநீர்

**இந்தக் கதை நிகழ்ந்திருக்கவே கூடாது என்பது எனது பிரார்த்தனை!**

இந்தியா. ஏதோ ஓர் ஊர். ஏதோ ஒரு தினத்தின் முற்பகல்.

ஊரின் கடைகள் எல்லாம் மூடியிருந்தன. சுவர்களில் புதிய, கசியும் சிவப்பில் ''அவர்களைக் கொல்லுங்கள்'' என்று பெரிதாக, கோணலாக எழுதியிருந்தது. தெருவில் ஆரவாரம் எதுவும் இல்லை. அமானுஷ்யமான மௌனம். வீடுகளின் ஜன்னல்களும் கதவுகளும் மூடப்பட்டுக் கிறித்தவ வேதத்தின் ஜட்ஜ்மெண்ட் தினம் போல் இருந்தது.

ஒரு ஜீப் ஆரவாரித்துக் கொண்டு வந்தது. அதன் மேல் பாகம் திறந்திருந்தது. அதில் சுமார் பதினைந்து பேர் நின்று கொண்டும், ஸ்திரமற்று உட்கார்ந்துகொண்டும் அடைத்திருந்தார்கள். ஜீப்பை ஓட்டிய இளைஞனின் வாயில் சிகரெட் தொங்கியது. நெற்றியில் கைக்குட்டை கட்டியிருந்தான். அனாவசிய வேகத்தில் அதை ஓட்டிக் கொண்டிருந்தான். அடிக்கடி கியர் மாற்றிக் கொண்டிருந்தான். சுருண்டு எழுந்த புகைப்படலம் பின்தொடர ஆர்ப்பாட்டமாகச் சென்று கொண்டிருந்த அந்த வண்டிக்கு இலக்கே எதுவும் இல்லை போல் இருந்தது. நேராகச் சென்று நின்று 'ரிவர்ஸ்' அடித்து மறுபடியும் ஆரவாரமாகச் சென்றது. ஜீப்பின் நடுவில் ஒருவன் மூங்கில் கம்பில் ஒரு பெரிய கொடி பிடித்துக்கொண்டிருந்தான். கொடி காற்றில் துடித்து ஆடியது. அவன் அருகில் மற்றொருவன் கொஞ்சம் தலைவன் போல் இருந்தான். கையில் ஒரு ரைஃபிள் வைத்திருந்தான். அதை வானத்தை நோக்கிச் சில தடவைகள் சுட்டபோது மரங்களிலிருந்து பறவைகள் படபடத்து விலகின.

அவர்கள் யாவரும் ஜால்ராக்களும், டப்பாக்களும், 'சலங்கைகளும் இரும்புச் சாதனங்களுமாக ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தார்கள். வெற்றி — வீரம் — ரத்தம் — போர் போன்ற வார்த்தைகள் உபயோகித்துக் கத்தித் தொண்டை கம்மிப் போயிருந்தார்கள்.

அவர்கள் அவ்வளவு தூரம் தெருவில் சத்தமிட்டும் அந்தக் கதவுகள் திறக்கவில்லை. அந்த ஜனங்கள் வெளிவரவில்லை.

''சிறிய ஊர்'' என்றான் ஒருவன்.

''பயந்து கொண்டார்கள்'' என்றான் இன்னொருவன்.



''ஃப்ரீ இண்டியா ரெஸ்டாரண்ட்!— நிறுத்து ஜீப்பை! உடை கதவை'' என்றான் போர்டுகளைப் படித்துக் கொண்டு வந்தவன்.

சரமாரியாக அந்த ஃப்ரீ இண்டியா ரெஸ்டாரண்டின் மூடிய கதவுகளின் மேல் கற்கள் விழுந்தன.

''நிறுத்தாதே போ! டவுன் பக்கம் விடு!'' என்றான் தலைவன்.

''டவுன் பக்கம்! டவுன் பக்கம்!'' என்று ஜால்ராவுடன் அவர்கள் பாடினார்கள்.

''நம் நாடு!''

''நமதே!''

''நம் மொழி!''

''நமதே!''

ஜீப் புதியவழியில் சற்றுத் தூரம் சென்றது.

''இளநீர் இளநீர்!'' என்றார்கள்.

ஒரு மரத்தினடியில் ஒரு கிழவன் இளநீர்கொத்துக்களை வைத்து இளைப்பாறிக் கொண்டிருந்தான்.

ஜீப் விசுக்கென்று நின்றது. அவர்கள் துள்ளிக் குதித்து வெளி வந்தார்கள். தூரப் பார்வை குறைந்த அந்தக் கிழவன் சலனமில்லாமல் உட்கார்ந்திருந்தான்.

''தாத்தா, இளநீர் விற்கிறியா?'' என்று கேட்டான்.

கிழவன் நிமிர்ந்தான். ''ஏன்?'' என்றான்.

''தாத்தா இன்றைக்கு எல்லாம் பூரா பந்த்! இன்றைக்கு ஒன்றும் விற்கக் கூடாது தெரியுமா?''

''தாத்தா! அரிவாள் இருக்கிறதா?'' என்றான் மற்றொருவன். அவர்கள் அந்த இள

# சுஜாதா







# முடிவாக ஒரு வார்த்தை!

**[புகழ்பெற்ற சில நூல்களின் முடிவு வாக்கியங்கள் இவை. எழுதியவர் யார்? நூலின் பெயர் என்ன? நினைவிருக்கிறதா?]**

1. "ஐயோ, மூச்சுப் போயிருந்தாலும் பெரிய காரியமில்லையே, தர்மத்தைத் தவற விட்டேனே!" என்று கூறிக் கண்ணீர் சிந்தினேன்.
2. கண்ணபிரான் செய்த குருனை நம் எல்லாருக்குமாகச் செய்த குருனையாகும். நம் அனைவருக்காக அர்ஜுனன் அந்த வாக்கைப் பகவானிடம் பெற்றான்.
3. அந்தத் தேசபக்தத் தியாகியின் விருப்பம் நிறைவேறுமாக!
4. அவன் தலைக்கருகில் தாழ்வாரத்துச் சுவரில் - ஒரு சதுரப் பொந்தில் கூடு வைத்த சிட்டு கீச் கீச் என்று வாலைத் தூக்கிக் கத்திக்கொண்டேயிருந்தது. கால் துவள, கீழே உட்கார்ந்து கொண்டான் அவன்.
5. மிஸ்டர் ஸ்வாமி அவன் முன்னேறி வரப் போட்டிருந்த திட்டங்கள், செல்வம் - வேதாந்தம் குடித்தன விமரிசைகள், அவன் தொழிலில் அடைந்த வெற்றிகள், இவைகளைப் பற்றி அறிய விரும்பினால் - அது மற்றொரு பெரிய கதை!
6. ஆனால் தேர்தல்கள் சீக்கிரம் முடிந்துவிடும்...பிறகு? வரும் ஆண்டு பூசலும் தொல்லையும், சச்சரவும் வேதனையும் நிறைந்த ஆண்டாக இருக்கலாம். இந்தியாவிலோ, வேறெங்குமோ அமைதி இருக்க வேண்டுமென்றால், விடுதலை உணர்வின் அடிப்படையில் அது அமைந்தால்தான் உண்டு.
7. தற்போதைக்கேனும், வாசகர்களிடம் நான் விடைபெற்றுக் கொள்ளுதல் வேண்டும். மனோ வாக்குக் காயங்களினால் அஹிம்ஸா தர்மத்தை அநுஷ்டிக்கும் வரம் எனக்கு அருளுமாறு சத்திய சொரூபியாகிய பரம்பொருளைப் பிரார்த்திக்கிறேன். அப் பிரார்த்தனையில் கலந்து கொள்ளுமாறு வாசகர்களை வேண்டிக் கொண்டு விடைபெற்றுக் கொள்கிறேன்.

18ம் பக்கம் பார்க்க






நீர்க் கொத்திலிருந்து ஆளுக்கு ஒன்று எடுத்துக்கொண்டார்கள்.

"விடுங்கள், நான் தருகிறேன்!" என்றான் கிழவன்.

"தாத்தா, நீ கிழவன். இன்றைக்கு வியாபாரம் பண்ணாதே!"

"ஏன்?"

"நம் மாநிலமே இன்றைக்கு பந்த்! கதவடைப்பு! எதிர்ப்பு!"

"அப்படியா? என் இளநீரைக் கொடுத்து விடுங்கள்; எனக்குக் கணக்குத் தெரியவில்லை!"

"தாத்தா! அரிவாள் இல்லையா?"

"காசு தருகிறாயா? அரிவாள் தருகிறேன்!"

"தா" என்றான்.

"காசு?"

"தருகிறேன், தா!"

கிழவன் சாக்குக்கு அடியில் இருந்த அரிவாளை எடுத்துக் கொடுத்தான்.

அந்த இளைஞன் புன்னகையுடன்; "இளநீரை வெட்டவா தாத்தா, உன் தலையை வெட்டவா?" என்றான்.

கிழவன் சிரித்தான்.

தலைவன் போலிருந்தவன் மற்றவர்களைக் கட்டுப்படுத்தினான். "கிழவன்! மூத்தவன்!

"மனங்கவர் மதிமுகமே
மௌனமான புகழாரம்"
—பிரான்ஸிஸ் பேகன்*



சிங்கப்பூர் சிங்காரி.
இப் பெண்ணழகியை **ஸிட்னி** அல்லது
**மெல்போர்ன், லண்டன்** அல்லது **ஆம்ஸ்டர்டாம்,**
**ஃப்ராங்க்ஃபர்ட்,** அல்லது **ரோம்,**
**டோக்கியோ** அல்லது **ஒஸாகா** அல்லது
**ஹாங்காங்,** இங்கெல்லாம் சந்திக்கலாம்.
எட்டு கிலோமீட்டர் உயரத்திலே
வானத்திலே வலம் வருவாள். சொகுசான ஸரோங்
கெபாயா அணிந்து, தங்கச் சிலையாக,
தனக்கே உரிய பாணியிலே உங்களை உளமார
உபசரிப்பாள். ஏனெனில்,
சிங்கப்பூர் ஏர்லைன்ஸின்
இதய வீணையே அவள்தானே!



**சிங்கப்பூர்**
**ஏர்லைன்ஸ்**

சொகுசான விமானப்
பயணத்துக்கு

எஸ்ஐஏ, நரிமன் பாயிண்ட், பம்பாய்-400 001
போன்: 259951, டெலெக்ஸ்: 011-3887
எஸ்ஐஏ, 70, மவுண்ட் ரோடு, சென்னை-6
போன்: 440607, டெலெக்ஸ்: எம்எஸ் 7278

*(பிரான்ஸிஸ் பேகன் எழுதிய நூலத்தின் தமிழாக்கம்)

GARTH



# முதுமை

உலகம் பொய். காண்பனவெல்லாம் மாயை என்பது வேதாந்தம். பொய்யான இந்த உலகில் நிலவும் மெய்களுள் நாம் அனைவரும் ஒருநாள் வயோதிகம் அடைவோம் என்பது நிச்சயமானது.

முதுமைக் காலம் மகிழ்ச்சி நிறைந்ததாகத் திகழ ஒருவர் உடல் நலம் உடையவராக மட்டும் இருந்தால் போதாது. பொருளாதார வசதியுடையவராகவும் இருக்க வேண்டும். கூட்டுக் குடும்ப வாழ்க்கை மறைந்து வரும் இந்தக் காலத்தில், வருமானத்திற்கு வழி இன்றி வயோதிகம் அடைந்தால் உங்களைப் பிறர் நன்றாகப் பராமரிப்பார்கள் என எதிர்பார்க்க முடியாது. முதுமைக் காலம் நிம்மதி நிறைந்ததாகத் திகழ தேவையான வருமானம் பெற **ஆயுள் இன்ஷூரன்சு** மூலம் வகை செய்யுங்கள்.



**ஆயுள் இன்ஷூரன்சு** போல
**ஆதரவு தருவது எதுவுமே இல்லை**

EP LIC-8-73

அவனுக்குத் தெரியாது. தாத்தா! உன் இள நீரைச் சுருட்டிக் கொள்!'' என்றான்.

''ஏன்?''

''யாரும் வாங்க மாட்டார்கள். எல்லாக் கதவுகளும் அடைத்திருக்கின்றன.''

''ஏன்?''

''நல்லவர்களை வேறு ஊர்களில் அடித்துக் கொல்கிறார்கள். அதற்கு எதிர்ப்பு!''

கிழவனுக்குப் புரியவில்லை. ''என் அரி வாளைக் கொடு'' என்றான்.

அரிவாளால் முகத்தைச் சொறிந்துகொண் டவன், அதை 'ஷிக்' என்று சுழற்றி வெட்டி னான். ''இப்படித்தான் வெட்ட வேண்டும்'' என்றான்.

இல்லை; கைகள் போதும் என்று ஒருவன் மானசீகமாகக் கழுத்தை நெரித்தான்.

''எல்லா விதத்திலும் நமக்கு அநியாயம்! எண்ணிக்கையில் நம் பாஷை பேசுபவர்கள் தான் அதிகம். சென்ஸஸ் தப்பு! பொய்! அப்புறம் அவர்கள் குண்டர்களை வைத்து நம்மை அடித்தால் நாம் அவர்களை அடிக்க எவ்வளவு நேரமாகும்?''

''அங்கேயே போய் விடலாம், ஒரு படை திரட்டிக் கொண்டு! நம் சகோதரர்கள், நம் சகோதரிகள் அங்கே பாதுகாப்பின்றி யிருக் கிறார்கள்! அங்கே நாம் போக வேண்டும்... இன்னும் படை திரட்டி இன்னும் ஆயுதம் சேர்த்து இன்னும்.....!''

''கவர்ந்த லாரிகளைக் கொடி போல் கட் டித் தெருவில் ஓடினார்களாம்!''

''தீர்த்துக் கட்ட வேண்டும். அதற்கு வேளை வந்து விட்டது!''

பிரேம் என்பவனும் அவன் இளம் மனைவி யும் ஒரு மலைவாசஸ்தலத்தில் சில தினங்கள் கழித்துவிட்டுத் தன் சொந்த ஊர் திரும்பி னார்கள். இரு மாநிலங்களின் எல்லையில் இருந்த அந்த ஊரைக் காரில் கடந்தார்கள். ஐந்து மணி நேரம் தொடர்ந்து கார் ஓட்டிய தால் அவன் களைத்திருந்தாலும், தன் புதிய மனைவியுடன் அவன் வெளி உலகை மறந்து கழித்த புதிய, ஆச்சரியங்கள் நிறைந்த கணங் களின் ஞாபகத்தில் உற்சாகமாகவே இருந் தான். அவனுடன் அருகில் ஒட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த அவன் மனைவியின் தலை வகிட்டின் ஆரம்பத்தில் குங்குமம் இருந்தது. பொம்மை போல் இருந்தாள். ஓரிரண்டு தடவையே கழிந்த கன்னியாக அந்த ஞாபகத்தில் அவள் உடம்பில் இலே சான பூரிப்பு இருந்தது. கன்னங்கள் நாணத் தினாலும் வெயிலினாலும் சிவந்திருந்தன.

''எல்லாக் கடைகளும் பூட்டி யிருக்கின் றனவே ஏன்?'' என்றான் அவன்.

''லஞ்ச் நேரமாக இருக்கலாம். இந்தப் பிர தேசத்து ஜனங்களே சோம்பேறிகள்'' என் றான். அவன் தொடையின்மேல் கைவைத்தான். அவள் அந்தக் கையை ஒதுக்கி ஸ்டீயரிங்கின் மேல் வைத்து ''அப்புறம்'' என்றாள்.

''பிரேம், அதோ பார்!'' என்றாள்.

தூரத்தில் மர நிழலில் ஒரு கிழவன் இள நீர்களைச் சேகரித்துக் கொண்டிருந்தான். அருகே சில இளைஞர்கள் இளநீர் குடித்துக் கொண்டு சிதறி நின்று கொண்டிருந்தார்கள்.

## இருபத்தைந்து ஆண்டு இந்திய இலக்கியம்




ஹிந்தி மொழியில் கடந்த ஐந்து ஆண்டுகளாக எழுத்தாளர் கூட்டுறவு சங்கத்தின் ஆதரவில் வெளி வரும் பத்திரிகையின் பெயர் ப்ரகர். இதில் கதை கட்டுரைகள் என்று வருவதில்லை. இலக்கிய வளர்ச்சி பற்றிய அறிமுக விமர்சனக் கட்டுரைகளே அதிகம் இடம் பெறுகின்றன. ஆண்டுதோறும் ஒரு விசேஷ மலர் வெளியிட்டுத் திறனாய்வு நடத்துகிறது.

இவ்வாண்டு, கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் அனைத்திந்திய பதினைந்து மொழிகள் எப்படி வளம் கண்டுள்ளன என்பதை ஏறக்குறைய இருநூறு பக்கங்களில் அழகாக அறிமுகப்படுத்தியிருக்கிறது. சம்ஸ்கிருத மொழியில்கூட எத்தனை நவீன இலக்கி யங்கள் தோன்றுகின்றன, வேற்று மொழிகளி லிருந்து மொழிபெயர்ப்புகள் நடந்துள்ளன என் பதைப் பற்றி அருமையான கட்டுரை ஒன்று வெளி யாகியுள்ளது. தமிழ் இலக்கியம் மற்ற மொழி களுடன் எப்படிப் போட்டி போட்டுக் கொண்டு கதை, கவிதை, நாவல், நாடகம் ஆகிய இலக்கியத் துறை யில் வளர்ந்துள்ளது என்பதைப் பற்றி டாக்டர் எஸ். என். கணேசன் ஆய்வையும் அறிமுகத்தையும் ஒருங்கிணைத்துக் கட்டுரை வழங்கியுள்ளார்.

முகவரி: ப்ரகர், ஏ-8-42, ராணா பிரதாப் பாக், தில்லி 110007. ஆண்டுச் சந்தா ரூ. 7.

---

''இளநீர் விற்கிறான். எனக்குத் தாகமாக இருக்கிறது'' என்றாள்.

''ஓகே! மேம்ஸாபின் கட்டளை!'' என்றான்.

தூரத்திலிருந்து அந்த ஃபியட் கார் வரு வதை அவர்கள் பார்த்தார்கள். வேகம் குறைந்து அது நின்றது. அதன் முன் பக்கத் தில் ஓர் இளைஞனும் பெண்ணும் ஒட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

அந்த இளைஞன் நவீனமாக உடை அணிந் திருந்தான். அவன் காரின் கதவைத் திறந்து கொண்டு ஒருதடவை தன் கைகளை உயர்த்திச் சோம்பல் முறித்துக் கொண்டான். பைக்குள் கைவிட்டு பர்ஸை எடுத்துக் கொண்டு கிழவன் அருகில் சென்றான். அவன் சல னத்தை அவர்கள் விடாமல் கவனித்தார்கள். அந்தப் பெண் அவர்களைப் பார்த்தாள். தலை கலைந்த இளைஞன் ஒருவன் அவளைப் பார்த்து, 'பளிச்' என்று பற்கள் தெரியச் சிரிப்பதைப் பார்த்துத் தலைகுனிந்து கொண்டாள்.

''கித்னா?'' என்றான் பிரேம்.

கிழவன் புரியாமல் ''என்ன?'' என்றான்.

''கித்னா? தேனா மச்?'' என்று இளநீரைத் தொட்டுச் சாடை காட்டினான்.

கிழவன் அருகே நின்றவர்களைப் பார்த் தான். அவர்களில் தலையில் கர்ச்சீப் கட்டி இருந்தவன், ''வா'' என்று மற்றொருவனை அழைத்தான்.

அவர்கள் அவனை மெதுவாக நெருங்கி னார்கள்.

''தாத்தா! இவனுக்கு இளநீர் கொடுக் காதே.''

1. பாரதியார் : 'ஞான ரதம்'
2. ராஜாஜி : 'சக்கரவர்த்தித் திருமகன்'
3. கல்கி : 'அலை ஓசை'
4. தி. ஜானகிராமன் : 'அம்மா வந்தாள்'
5. தேவன் : 'மிஸ்டர் வேதாந்தம்'
6. ஜவாஹர்லால் நேரு : 'டிஸ்கவரி ஆஃப் இந்தியா'
7. மகாத்மா காந்தி : 'சத்திய சோதனை' (கல்கி தமிழாக்கம்)

தொகுப்பு : அ. ஆ.

அந்த இளைஞன், கிழவன் இருவரும் புரியாமல் விழித்தார்கள். மேலும் சிலர் அருகே வந்தார்கள்.

''நீ எந்த மாநிலத்தவன்?''

பிரேம் ஆங்கிலத்தில் ''மன்னிக்கவும். எனக்கு உங்கள் பாஷை தெரியாது. ஆங்கிலத்தில் பேசுங்கள்'' என்றான்.

''கோபால்! இவனை இங்கிலீஷில் கேள்.''

கோபால் என்பவன் ஆங்கிலத்தில் ''நீ எந்த மாநிலம்?'' என்றான்.

பிரேம், ''நான் ஓர் இந்தியன்'' என்றான்.

''பிரேம்! இளநீர் வேண்டாம். வா, போகலாம்'' என்று கலவரத்துடன் கூப்பிட்டாள் அந்தப் பெண். அவள் எதிரே ஒருவன் நின்றுகொண்டு அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

பிரேமுக்கு அந்த இடத்தின் உஷ்ணம் திடீரென்று உரைத்தது. அந்த இளைஞர்களின் முகத்தில் விரோதம் தெரிந்தது. அந்த ரைஃபிள் தெரிந்தது. அந்தச் சலங்கைகள் அந்த ஜால்ரா, கம்புகள், அந்தக் கொடி...

''தேர் இஸ் நோ இண்டியா மிஸ்டர்!''

''இவன் அவர்களைச் சேர்ந்தவன்தான்!''

''ஆம், ஆம், ஆளைப் பார்த்தாலே தெரிகிறது.''

''பிரேம், ப்ளீஸ் வந்துவிடு! எனக்குப் பயமாக இருக்கிறது.''

இப்போது அவனை அவர்கள் சூழ்ந்திருந்தார்கள். அவன் சட்டையை அவர்களில் ஒருவன் தொட்டு துணியின் வன்னத்தைப் பரிசோதித்தான்.

''மீசை அழகாக வைத்திருக்கிறான் பார்!''

பிரேம் கிளம்ப முயற்சி செய்தான். அவர்களை நட்புடன் விலக்கினான். அவர்கள் வழி விடவில்லை.

''விடுங்களேன், அவனை. இளநீர் குடிக்கட்டும்'' என்றான் கிழவன்.

கோபால், ''உங்கள் மாநிலத்தில் எங்கள் ஆசாமிகளைக்கொன்றிருக்கிறார்கள்'' என்றான்.

''எனக்கு மாநிலம் கிடையாது! எனக்கு மாநிலம் கிடையாது.''

''தப்பிக்கப் பார்க்கிறான்.''

''நீ பேப்பர் பார்க்கவில்லையா? இன்று இந்த மாநிலம் முழுவதும் கதவடைப்பு. என்ன தைரியம் இருந்தால் நீ கார் ஓட்டிச் செல்வாய்?''

''மன்னிக்கவும். சென்ற மூன்று தினங்களாக நான் பேப்பர் பார்க்கவில்லை.''

''உன் சொந்த ஊர் எது?''

''பிரேம்!''

பிரேம் சற்றுப் பயத்துடன் புன்னகை செய்தான். ''ப்ளீஸ் எனக்கு வழி விடுங்கள்.''

''இன்று கார் ஓட்டக் கூடாது.''

''சரி, சரி! நான் திரும்பச் சென்று ஓரத்தில் நிறுத்தி விடுகிறேன். எனக்கு வழி விடுங்கள்.''

''காலைத் தொட்டு வணங்கு. வழி விடுகிறோம்.''

''பிரேம்! பிரேம்!''

''ஊரைச் சொல்ல மாட்டேன் என்கிறான் பார்!''

சிலர் அவன் மனைவிக்கு முன் கிராமிய நடனம் ஆடிக் கொண்டிருந்தார்கள்.

அவன் சற்றுத் தயங்கினான். சற்றுத்தான். அவன் நெற்றியில் வியர்வை முத்துக்கள் தெரிந்தன.

'' என்ன செய்ய வேண்டும் ?''

''வணங்கு !''

''சரி !'' என்று அவன் குனிந்து தொட்டு நிமிர்ந்தான். ''திருப்திதானே!'' என்றான்.

''அவளையும் கும்பிடச் சொல் !''

''உன் மனைவியையும் வணங்கச் சொல்.''

அவர்களில் சிலர் காரின் அருகே சென்று அதன் கதவைத் திறந்து, ''வா வெளியே!'' என்று அவளிடம் கத்தினார்கள்.

அவள் பயந்து சீட்டின் ஓரத்தில் ஒதுங்க முற்பட அந்த ஜன்னல் வழியாக முகங்கள் தெரிந்து சிரித்தன. ஒருவன் அவளை மார்பில் தொட்டான்.

அப்போது அந்த இடத்தில் திடுமென எரிமலை வெடித்தது. அந்த இளைஞன் திமிறி விலக்கிக் கொண்டு, ''விடு அவளை!'' என்று கார் அருகே ஓடி அவர்களைத் தள்ளினான். அவர்கள் அவன் சட்டையைப் பிடித்தார்கள். அந்தப் பெண் பீதியுடன் கதவைத் திறந்து அவனை அனுமதிக்க முயற்சி செய்ய, அவனால் உள்ளே செல்ல முடியவில்லை. காரின் பானெட்டில் மூன்று பேர் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். இளைஞன் மிக மிக பலத்துடன் தன் காரில் நுழைந்து அதைக் கிளப்ப முயற்சி செய்தான். அவர்கள் அவனை முரட்டுத்தனமாகப் பிடித்து வெளியே இழுத்தார்கள். அவன் கண்மூடித்தனமாக 'மடேர் மடேர்' என்று யாரையோ அடித்தான். அவன் உடைகள் கிழிந்தன. அவர்கள் அவன்மேல் பரவினார்கள்.

இப்போது அந்தச் சிக்கலான கூட்டத்தில் அந்த இளைஞனும் பெண்ணும் எங்கிருக்கிறார்கள் என்பது தெரியவில்லை. காரின் உள்ளே இருந்து பொருட்கள் வெளியே தெறித்தன. A Marriage Manual, அந்தப் பிரதேசத்தின் ரோட் மாப், தண்ணீர் பாட்டில், வளையல்கள்.... முத்து....

காரின் உச்சியில் ஒருவன் ஏறிக் கொண்டு நடனமாடினான். கார் சீராக ஆடியது.

பிரேமின் குரல் ஹீனமாகக் கேட்டது...

''உங்களைப் போல் ஆயிரக்கணக்கில் அங்கே இருப்பதை நினைத்துப் பாருங்கள்.... நான் ஓர் இந்தியன்... நான்....''

''கோபால்! ரைஃபிளை எடு.''

அங்கிருந்து சற்றுத் தூரத்தில் சாலையில் சுதந்திரமாகத் திரிந்து கொண்டிருந்த வற்றிப் போன பசு ஒன்று வெடிச் சத்தத்தைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தது.

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

## ஐந்தாம் அத்தியாயம்

## காதற் புயல்

சிற்ப வீட்டின் வாசலில் வந்து நின்ற சிவகாமியைக் கண்டதும், பரஞ்சோதியின் கண்கள் அவளை ஏறிட்டுப் பார்க்க முடியாமல் தரையை நோக்கின. ஆயனச் சிற்பியின் மகள் சாதாரண மானிடப் பெண் அல்ல — தெய்வாம்சம் உடையவள் என்ற எண்ணம் முதன் முதலில் அந்த வீட்டுக்கு வந்திருந்த போது பரஞ்சோதியின் உள்ளத்தில் தோன்றியிருந்தது. சிவகாமிக்கும் மாமல்லருக்கும் ஏற்பட்டிருந்த இருதய பாசத்தைப் பற்றி முன்பே அவர் ஒருவாறு ஊகித்துத் தெரிந்து கொண்டிருந்தார். நேற்றிரவு பல்லவ குமாரரின் வாய்மொழியினாலேயே அது உறுதிப்பட்டது.

அரண்மனை நிலா மாடத்தில் சரத் கால சந்திரனின் அமுத கிரண போதையை அநுபவித்துக் கொண்டு, சிநேகிதர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்த போது, மாமல்லர் தம்முடைய இருதயத்தையே அவருக்குத் திறந்து காட்டிவிட்டார். இத்தனை நாளும் மாமல்லரின் உள்ளத்தில் அணை போட்டுத் தடுத்து வைத்திருந்த பிரேமைப் பிரவாகமானது அவருடைய இருதய அந்தரங்கத்தை வெளியிடக்கூடிய உற்ற தோழன் ஒருவன்



கிடைத்த உடனே, அணையை ஒரே மோதலில் இடித்துத் தள்ளிவிட்டு அமோக வெள்ளமாகப் பாய்ந்தது. பரஞ்சோதி அந்த வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு திக்குமுக்காடிப் போனார். இந்த மாதிரி காதல் வெறி அவருக்கு முற்றிலும் புதுமையாயிருந்தது. திருவெண்காட்டில் நமசிவாய வைத்தியர் வீட்டில் அவருடைய உள்ளத்தைக் கவர்ந்த நங்கை ஒருத்தியும் இருக்கத்தான் இருந்தாள். ஆனால், அவளுடைய நினைவானது பரஞ்சோதிக்கு அமைதி கலந்த இன்பத்தையே உண்டாக்கியது. மாமல்லருடைய காதலோ அவருடைய உள்ளத்தை, கடும் புயல் சுழன்று சுழன்று அடிக்கும் மலை சூழ்ந்த பிரதேசமாகவும், திடீர் திடீர் என்று தீயையும், புகையையும் கக்கும் எரிமலையாகவும், பிரும்மாண்டமான அலைகள் மலை மலையாக எழுந்து மோதும் குடாக் கடலாகவும் செய்திருப்பதைப் பரஞ்சோதி கண்டார்.

மாமல்லருடைய காதல் வேகம் பரஞ்சோதிக்குப் பெருவியப்பை உண்டாக்கிற்று; அதோடு, பயத்தையும் உண்டாக்கிற்று.

அவர்களுடைய காதல் பூர்த்தியாவதற்கு எத்தனை எத்தனை தடைகள் இருக்கின்றன என்பதை எண்ணியபோது பரஞ்சோதியின் மனம் கனிந்தது. எல்லாவற்றிலும் பெரிய தடை, மகேந்திர சக்கரவர்த்தியின் விருப்பம் வேறுவிதமாயிருந்ததேயாகும். அந்தப் பெருந் தடைக்குப் பரிகாரம் உண்டா? அது எப்போதாவது நிவர்த்தியாகக் கூடுமா?

சென்ற எட்டு மாதங்களில் சக்கரவர்த்தியிடம் நெருங்கிப் பழகி அவருடைய அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாகி, அநேக விஷயங்களில் அவருடைய அந்தரங்கக் கருத்துக்களையெல்லாம் அறிந்திருந்த பரஞ்சோதி, மாமல்லரின் காதலைப் பற்றிச் சக்கரவர்த்திக்குத் தெரியும் என்றும், அதை அவர் விரும்பவில்லையென்றும் திட்டமாய்த் தெரிந்து கொண்டிருந்தார்.

எனவே, இப்போது அவருடைய நிலைமை மிகவும் தர்ம சங்கடமாய்ப் போயிருந்தது. ஒரு பக்கத்தில், அவருடைய மனப்பூர்வமான பக்திக்குப் பாத்திரமானவரும், தந்தையின் ஸ்தானத்தை வகிப்பவருமான மகேந்திரர், குமார சக்கரவர்த்தி



யின் உள்ளத்தைச் சிவகாமியிடமிருந்து திருப்ப விரும்புகிறார் என்பதை அவர் அறிந்திருந்தார். மாமல்லரோ, தம் முடைய இருதய அந்தரங்கத்தை யெல்லாம் வெளியிடுவதற்குரிய உற்ற துணைவராக அவரைப் பாவித்து, தம் மனோரதத்தை நிறைவேற்றிக் கொடுப்பதற்கு அவருடைய ஒத்தாசையை எதிர்பார்க்கிறார். சக்கரவர்த்திக்கு உகந்ததைச் செய்தால், தம்மை நம்பிய சிநேகிதருக்குத் துரோகம் செய்வதாகும். சிநேகிதருக்கு உகந்ததைச் செய்தாலோ சக்கரவர்த்திக்கு விருப்பமில்லாததைச் செய்ததாக முடியும்.

இந்தத் தர்மசங்கடம் ஒருபுறமிருக்க, சிவகாமியின் நிலைமை என்ன? அவளுக்கு நன்மையானது எது? இந்தப் பொருத்தமில்லாத காதலினால், அவளுக்கு உண்மையில் நன்மை உண்டாகுமா? இது விஷயத்தில், ஆயனருடைய அபிப்பிராயம்தான் என்ன?

இத்தனை மனக் குழப்பங்களுக்கிடையே ஒன்று மட்டும் மிகத் தெளிவாயிருந்தது. சிவகாமி என்று எண்ணியதுமே, அவருடைய மனத்தில் பயபக்தியும் மரியாதையும் அன்பும் அபிமானமும் சங்கோசமும் வாத்சல்யமும் கலந்த புனிதமான தெய்விக உணர்ச்சி தோன்றிற்று. சிவகாமி விஷயத்தில் அவருடைய மன நிலைமைக்குத் தகுந்த உதாரணம் சொல்ல வேண்டுமானால், சீதாதேவி விஷயத்தில் லக்ஷ்மணனுடைய மன நிலைமையைத்தான் சொல்ல வேண்டும்.

* * *

ரதத்தில் இருந்தது மாமல்லர் அல்ல என்று கண்டதும், வருகிறவர் வேறு யார் என்று தெரிந்து கொள்ளக்கூடச் சிவகாமி ஆசைப்படவில்லை. உடனே, அவளுடைய கவனம் ரதத்தை ஓட்டிக் கொண்டு வந்த கண்ணபிரான் மீது சென்றது.

கண்ணபிரான் ரதத்தின் முகப்புத் தட்டிலிருந்து குதித்து முன்னால் வர, பரஞ்சோதி அவனைத் தொடர்ந்து பின்னால் வந்தார். அவர்கள் நெருங்கி வந்ததும், சிவகாமி கண்ணபிரானை நோக்கி, "அண்ணா! வீட்டில் எல்லாரும் சௌக்கியமா?" என்று கேட்டாள். அவளுடைய குரலில் தீனமும் ஏமாற்றமும் நன்கு தொனித்தன.

"இல்லை, தாயே! இல்லை! வீட்டில் ஒருவரும் சௌக்கியம் இல்லை. கமலிக்குத் தலைவலி, அப்பாவுக்கு முழங்கால் வலி, எனக்கும் உடம்பு சரியாகவே இல்லை..."



"உங்களுக்கு என்ன, அண்ணா?" என்று சிவகாமி கேட்டாள்.

"அதுதான் தெரியவில்லை. வயிற்றில் ஏதோ கோளாறு. கமலி, 'உன் வியாதிக்கு மருந்து பூனைதான்!' என்கிறாள்."

"பூனை மருந்தா? இது என்ன கூத்து?" என்றாள் சிவகாமி.

"ஆமாம், தாயே! இப்போதெல்லாம் எனக்கு அசாத்தியமாகப் பசிக்கிறது. நேற்று ராத்திரி கமலி சுட்டு வைத்திருந்த ஒன்பது அப்பம், ஏழு தோசை, பன்னிரண்டு கொழுக்கட்டை அவ்வளவையும் தின்றுவிட்டு, 'இன்னும் ஏதாவது இருக்கிறதா, கமலி!' என்று கேட்டேன். 'உன் வயிற்றில் எலி இருக்கிறது; ஒரு பூனையைச் சாப்பிடு; அப்போதுதான் உன் பசி தீரும்' என்றாள்!"

இதைக் கேட்ட சிவகாமி 'கலீ' ரென்று சிரித்தாள். பரஞ்சோதியினாலும் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.



பரஞ்சோதியின் சிரிப்புச் சத்தத்தைக் கேட்ட சிவகாமி அவர் பக்கம் திரும்பிப் பார்த்தாள். ஆஹா! இது யார்?

பரஞ்சோதி தைரியமடைந்து, "அம்மணி! என்னைத் தெரியவில்லையா?" என்று கேட்டார்.

"யார்? திருவெண்காட்டிலிருந்து..."

"ஆம்; நான்தான்! திருவெண்காட்டு நமசிவாய வைத்தியரிடமிருந்து அப்பாவுக்கு ஓலை கொண்டு வந்த பரஞ்சோதிதான்........"

அப்போது, கண்ணபிரான் குறுக்கிட்டு, "மன்னிக்க வேண்டும்! கல்யாணச் சந்தடியில். மாப்பிள்ளையை மறந்து போனேன், தாயே! இவர் யார் என்று நான் சொல்கிறேன். காஞ்சிக் கோட்டையின் பிரதம தளபதி இவர். கோட்டைக் காவலுக்காகச் சக்கரவர்த்தியே இவரை அனுப்பியிருக்கிறார். இனிமேல் காஞ்சிக் கோட்டையைப் போல் ஒளிந்து கொள்வதற்குப் பத்திரமான இடம் பூலோகத்திலேயே கிடையாது. இவருடைய கட்டளை இல்லாமல் யமன்கூட இனிமேல் கோட்டைக்குள் நுழைய முடியாது!" என்றான்.

கண்ணபிரான் ஒரு மாதிரி விதூஷகன். இந்த மாதிரியெல்லாம் மாமல்லரிடமே பேசுவதற்கு உரிமை பெற்றவன் என்று பரஞ்சோதி அறிந்திருந்தார். எனவே, அவனுடைய பேச்சைப் பொருட்படுத்தாமல், சிவகாமியை நோக்கி, "அப்பா எங்கே? உள்ளே இருக்கிறாரா?" என்று கேட்டார்.

கண்ணபிரானுடைய வேடிக்கைப் பேச்சு அந்தச் சமயம் சிவகாமிக்கும் பிடிக்கவில்லை என்று அவளுடைய முகக் குறி காட்டிற்று. "அப்பா அதோ வருகிறார்" என்றாள்.

பரஞ்சோதி திரும்பிப் பார்த்தார். ஆயனர் மரத்தடியிலிருந்து வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

அவர் அருகில் வந்ததும், தளபதி பரஞ்சோதி, "ஐயா! என்னை அடையாளம் தெரிகிறதா?" என்று கேட்டார்.

உடனே, ஆயனர் ஆவலுடன், "யார்? பரஞ்சோதியா?" என்று விரைந்து வந்து அவரைத் தழுவிக் கொண்டார். பிறகு, சற்றுத் தாழ்ந்த குரலில், "தம்பி! போன காரியம் எப்படி? காயா? பழமா?" என்று கேட்டார்.

அப்போது அவருடைய கண்களில் தோன்றிய வெறியையும், குரலில் தொனித்த பரபரப்பையும் கவனித்த பரஞ்சோதிக்குக் கண்ணில் நீர் துளித்தது. தழுதழுத்த மெல்லிய குரலில், "இந்தத் தடவை காரியம் ஜயமாகவில்லை. வெறுங் கையுடனேதான் திரும்பி வந்திருக்கிறேன். ஆனால், என்றைக்காவது ஒருநாள் நிச்சயமாக அஜந்தா இரகசியத்தை அறிந்து வந்து உங்களுக்குத் தெரிவிப்பேன்" என்று கூறினார்.

"வேண்டாம், தம்பி! வேண்டாம். நீ வழியில் பல்லவ சைனியத்தில் சேர்ந்துவிட்டதாக நானும் கேள்விப்பட்டேன். ஒருவேளை பொய்யாயிருக்குமோ என்று நினைத்தேன். அதனால் பாதகமில்லை. என்றும் அழியா வர்ண இரகசியத்தை நானே சீக்கிரத்தில் கண்டுபிடித்து விடுவேன், தம்பி! சில புதிய சோதனைகள் செய்து கொண்டிருக்கிறேன். வருகிறாயா, காட்டுகிறேன்!'

# இன்னும் எத்தனை ஆண்டுகள் வாடகை வீட்டில் குடியிருக்கப் போகிறீர்கள் ?





# உங்களுக்கென்று ஒரு சொந்த வீடு வேண்டாமா?

**விஜிபி ஹவுஸிங்**



## புரட்சிகரமான திட்டமொன்றை உங்களுக்கு வழங்குகிறது

ஒரு சொந்த வீடு கட்டிக்கொள்ள அரும்பாடுபட்டு ஒவ்வொரு காசாகச் சேமிக்கும் காலம் மலையேறிவிட்டது. விஜிபி சுலபத் தவணை முறையில் சாதாரண மனிதனின் நல்வாழ்வுக்கென இப்பொழுது வீடும், வீடுகட்ட மனையும் அளிக்கிறார்கள்.

இலட்சக்கணக்கான மக்கள் இன்றைய இல்லங்களுக்குத் தேவையான வாழ்க்கை வசதிப் பொருட்களை விஜிபியிலிருந்து சுலபத் தவணையில் வாங்கிப் பயன் பெற்றுள்ளனர்.

அவர்களில் நீங்களும் ஒருவராக இருக்கலாம்!

மீண்டும் வாருங்கள்! உங்களுக்கென ஒரு சொந்த வீடும், வீடுகட்ட மனையும் வாங்கி உங்கள் நீண்டகால ஆவலை நிறைவேற்றிக் கொள்ளுங்கள்.

**மனை வாங்க** மொத்த மதிப்பில் 10 சதவிகிதத்தை முதல் தவணையாகவும் மீதியுள்ளதை 19 சுலபமான மாதத் தவணைகளிலும் செலுத்துங்கள்.

**வீடு வாங்க** மொத்த மதிப்பில் 25 சதவிகிதத்தை முதல் தவணையாகவும் மீதியுள்ளதை 60 சுலபமான மாதத் தவணைகளிலும் செலுத்துங்கள்.

**விஜிபி ஹவுஸிங்**
பிரைவேட் லிமிடெட்

விஜிபி சதுக்கம், சைதாப்பேட்டை, சென்னை 600015

***வளமான வாழ்வுக்கு விஜிபி***

national 345

Shilpi HPMA 36a/73 Tam

வலிமிகுந்த தலைவலிக்கு
மிக விரைந்த விடுதலை!



ஒரே ஒரு

# அவேதன்®

ப்ளஸ் 

சக்தி வாய்ந்தது,
விரைந்து
செயல்படுவது
அவேதன் ப்ளஸ்

SQUIBB ® ®

SARABHAI CHEMICALS PVT. LTD.

® இ.ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேட்டட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். எஸ்.சி.பி.எல். இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

என்று ஆயனர் தாம் உட்கார்ந்திருந்த மரத்தடியை நோக்கினார்.

இதற்குள் சிவகாமி, "அப்பா! அண்ணன் எட்டு மாதங்கள் கழித்து வந்திருக்கிறார். உள்ளே வந்து உட்காரச் சொல்லுங்கள். எல்லாம் விவரமாகக் கேட்கலாம்" என்றாள்.

"ஆமாம், ஆமாம்! வா, தம்பி!" என்று கூறி, ஆயனர் பரஞ்சோதியை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார்.

## ஆறாம் அத்தியாயம்

# கலை வெறி

ஆயனர் வீட்டுச் சிற்ப மண்டபமானது கிட்டத்தட்டத் தாம் எட்டு மாதங்களுக்கு முன்பு பார்த்தது போலவே இருப்பதையும், ஆயனர் அப்போது அரைகுறையாக வேலை செய்துவிட்டிருந்த சிலைகள் இன்னும் அரை குறையாகவே இருப்பதையும் பரஞ்சோதி பார்த்த போது, அவருடைய மனத்தில் இன்னதென்று சொல்ல முடியாத ஒரு சோர்வு உண்டாயிற்று. 'இந்த யுத்தம் என்னத்துக்காக வந்தது?' என்ற எண்ணமும் அவருடைய வீர உள்ளத்தில் தோன்றியது. தாழ்வாரத்தின் முனையில் ஆயனரும் பரஞ்சோதியும் உட்கார்ந்தார்கள். சிவகாமி முன்னொரு சமயம் நின்றது போலவே இப்போதும் அருகிலிருந்த தூணைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

"உங்களுக்குத் தெரியுமா, அப்பா! இவர்தான் இப்போது காஞ்சிக் கோட்டையின் தளபதி!" என்றாள் சிவகாமி.

"அப்படியா! தம்பியின் முகக் களையைப் பார்த்து, இவன் பெரிய பதவிக்கு வருவான் என்று அப்பொழுதே நாகநந்தியடிகள் சொன்னார்......." என்று கூறிய ஆயனர், சட்டென்று நினைத்துக் கொண்டு, "தம்பி! ஓலையை என்ன செய்தாய்?" என்று கேட்டார்.

"ஐயா, அது விஷயத்திலேதான் ஏமாந்து போய்விட்டேன். தாங்களும் நாகநந்தியும் எவ்வளவோ எச்சரித்திருந்தும் பயனில்லாமல் போய்விட்டது. ஓலை....."

"அடாடா! அதைச் சக்கரவர்த்தியிடம்......"

"ஆம், ஐயா! ஓலை சக்கரவர்த்தியிடம் சிக்கிவிட்டது."

"ஆஹா!" என்றார் ஆயனர். பிறகு, "மகேந்திர வர்மர் அதைப் பற்றி என்ன சொன்னார்?" என்று கேட்டார்.

"மகேந்திரவர்மரா? நான் பல்லவ சக்கரவர்த்தியைச் சொல்லவில்லையே; வாதாபி சக்கரவர்த்தியை அல்லவா சொன்னேன்? வழியில் என்னை வாதாபி வீரர்கள் பிடித்துக் கொண்டு போய்ப் புலிகேசியின் முன்னால் நிறுத்தினார்கள். ஓலையையும் அவர்கள்தான் பலாத்காரமாய்க் கைப்பற்றிக் கொண்டார்கள்."

ஆயனர் வாயிலிருந்து மீண்டும், 'ஆ!' என்னும் வியப்பொலி எழுந்தது. அதே சமயத்தில் எங்கேயோ, யாரோ, பெருமூச்சுவிடுவது போல் சத்தமும் கேட்டது.

பாம்பின் சீறல் போன்ற அந்தச் சத்தத்தைப் பரஞ்சோதி கவனித்தார். ஆனால், ஆயனராவது சிவகாமியாவது கவனிக்கவில்லை.

சிவகாமி அப்போது வாசற்பக்கத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். அங்கே, உள் வாசற்படியண்டை நின்ற



கண்ணபிரான் சிவகாமியை நோக்கி ஏதோ சமிக்ஞை செய்து கொண்டிருந்தான்.

"தம்பி! உண்மையாகவே நீ வாதாபி புலிகேசி சக்கரவர்த்தியைப் பார்த்தாயா?" என்று ஆயனர் வியப்புடன் கேட்டார்.

"ஆம், ஐயா! அதோ, அந்தப் புத்த விக்கிரகம் உள்ள தூரத்தில் வாதாபி சக்கரவர்த்தி இருந்தார்....."

"சக்கரவர்த்தி என்ன சொன்னார்?"

"யாருக்குத் தெரியும்? நான் அறியாத பாஷையில் அவர் பேசினார்...... தங்களுக்கு இருக்கும் ஆவலைப் பார்த்தால், வாதாபி சக்கரவர்த்தியைப் பார்க்க விரும்புவதாய்த் தோன்றுகிறதே!"

"ஆம், தம்பி! உன்னை அனுப்பாமல், நானே ஓலையை எடுத்துக் கொண்டு போயிருக்கக் கூடாதா என்று கூடத் தோன்றுகிறது!"

"ஏன் அவ்வளவு ஆர்வம் ஐயா?"

"வாதாபி சக்கரவர்த்தி இளம் பிராயத்தில் அஜந்தா மலையில் இரண்டு

## அறிந்தவன் !

அறியாத ஒருவன் தனக்குத்
தெரியாதென்பதை அறியாமல் இருந்தால் -
அவன் ஒரு முட்டாள்
அவனை ஒதுக்கு.



தெரியாத ஒருவன் தனக்குத்
தெரியாதென்பதைத் தெரிந்திருந்தால் -
அவன் ஒரு குழந்தை
அவனுக்குக் கற்றுக் கொடு.



தெரிந்திருப்பவன் அது தனக்குத்
தெரியுமென்பதையே தெரியாமலிருந்தால் -
அவன் தூங்குகின்றான்
அவனைத் தட்டி எழுப்பு



அறிந்திருப்பவன் அது தனக்குத்
தெரியுமென்பதை அறிந்திருந்தால் -
அவன் ஒரு தத்துவஞானி !
அவனைப் பின்பற்று !

- ஆங்கிலத்தில் ''ஷாரோ'' சொன்னது
- தமிழில் மா. பா. குருசாமி

---

வருஷங்கள் இருந்தாராம். ஆகையால், அவருக்கு அஜந்தா வர்ணத்தின் இரகசியம் தெரிந்திருக்குமல்லவா?''

வஜ்ரபாஹு கலைகளை இகழ்ந்து கூறியதெல்லாம் பரஞ்சோதிக்கு அப்போது நினைவு வந்தது. அது எவ்வளவு உண்மை? ஆயனரின் கலை வெறி அவரை எப்படிப் பைத்தியமாக அடித்திருக்கிறது? புலிகேசி பகை அரசன் என்பதைக்கூட மறந்து அவனைப் பார்க்கும் ஆவலை உண்டாக்கியிருக்கிறதல்லவா?

''ஐயா ! நான் முக்கியமாக எதற்காக வந்தேனோ, அந்தக் காரியத்தை இன்னும் சொல்லவில்லை. சக்கரவர்த்தி தங்களிடம் ஒரு செய்தி தெரிவிக்கச் சொல்லி எனக்கு ஆக்ஞாபித்தார்...''

''எந்தச் சக்கரவர்த்தி?'' என்றார் ஆயனர்.

''மகேந்திர பல்லவர்தான்!''

'' ஆ ! மகேந்திர பல்லவர்! — அவரைப் பற்றி நான் என்னவெல்லாமோ நினைத்திருந்தேன். ஒரு சமயம் இந்தப் பல்லவ இராஜ்யத்திலுள்ள சிற்பிகள் எல்லாம் சேர்ந்து சபை கூடி மகேந்திர பல்லவருக்கு 'விசித்திர சித்தர்' என்று பட்டம் கொடுத்தோம். அதைக் காட்டிலும், 'சபல சித்தர்' என்று அவருக்குப் பெயர் கொடுத்திருக்கலாம்.''

'' ஏன், இப்படிச் சொல்கிறீர்கள், ஐயா ?''

''பார், தம்பி ! இங்கிருந்து என்னை மாமல்லபுரத்துக்குப் போகச் சொன்னார். ஐந்து மலைக் கோயில்களும் ஆறு மாதங்களில் முடிய வேண்டும் என்றார். ஒரு மாதத்துக்குள்ளாக, 'கோயில் வேலையை நிறுத்து!' என்று கட்டளையிட்டார். சக்கரவர்த்தி முன்போல் இல்லை தம்பி; ரொம்பவும் மாறிப் போய்விட்டார் !''

''அப்படியொன்றும் அவர் மாறவில்லை, ஐயா ! யுத்தம் காரணமாகச் சிற்சில காரியங்கள் செய்யவேண்டியிருக்கிறது......''

'' யுத்தம் ! பாழும் யுத்தம் ! இப்போது நடக்கிற யுத்தம் போதாது என்று பழைய பாரத யுத்தத்தை வேறு கட்டிக் கொண்டு அழ வேண்டுமாம். ஒவ்வொரு ஊரிலும் பாரத மண்டபங்கள் கட்ட வேண்டுமாம். நான் ஒரு விஷயம் சொல்லட்டுமா, தம்பி ! உண்மையில் மாமல்லபுரத்துச் சிற்ப வேலையைச் சக்கரவர்த்தி நிறுத்தியது பாரத மண்டபம் கட்டுவதற்காக அல்ல; சிற்பிகளுக்கும் சிற்றுளிகளுக்கும் படி கொடுத்து வந்த அரிசி, பருப்பு மிச்சமாகட்டும் என்றுதான் ! துறைமுகப் பண்டக சாலைகளில் இருந்த அவ்வளவு தானியங்களையும் காஞ்சிக்குக் கொண்டு போய் விட்டார்களாம்!''

''யுத்தம் நடத்துவதற்கு இவையெல்லாம் அவசியமான காரியங்கள், ஐயா ! காஞ்சிக் கோட்டை ஒரு வருஷமோ, இரண்டு வருஷங்களோகூட முற்றுகைக்கு ஆயத்தமாயிருக்க வேண்டும். வாதாபியின் சமுத்திரம் போன்ற சைனியம் திரண்டு வருவதை நீங்கள் மட்டும் பார்த்திருந்தால்......''

''வாதாபி சைனியம் வருகிறது, வருகிறது என்று எட்டு மாதங்களாய்த் தான் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் !......''

''ஆனால், இன்னும் ஏன் அந்தப் பிரம்மாண்ட சைனியம் இங்கே வந்து சேர

# மோதி
# இன்பக் குளியலுக்கு இந்தியாவின் இணையற்ற சோப்

இப்போது இரண்டு சைஸ்களில் உங்களை நாடி வருகிறது. இந்த சோப் தரும் வளம் பொருந்திய பட்டுப்போன்ற நுரை உங்கள் மேனியில் பட்டுக் கொஞ்சும் போது உடல் புல்லரிக்கும். அந்த இன்பத்தில் குளித்து எழுகையில் உலகமே இன்பமயமாகத் தோன்றும். மோதி உங்களுக்கெனவே உருவாக்கப் பட்டது. மல்லிகை, ரோஜா, வெட்டிவேர் ஆகிய மூன்று நறுமணங்கள். இன்றே ஒன்றைத் தேர்ந்தெடுப்பீர். நாளை முதலே இன்பவாரிதியில் குளிப்பீர்!

## மோதி

இன்பக் குளியலுக்கான இணையற்ற சோப்
**இப்போது இரண்டு சைஸ் களில் கிடைக்கிறது.**




OBM-2384 TM

வில்லை, தெரியுமா ? மகேந்திர பல்லவர் மட்டும் அப்போது போர்க்களத்துக்குப் போயிராவிட்டால், இதற்குள் காஞ்சிமா நகர் இருந்த இடம் புல் முளைத்துப் போயிருக்கும், ஐயா ! வாதாபி சைனியத்தில் வரிசை வரிசையாக, மலை மலையாக, நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் நின்ற ஆயிரக்கணக்கான போர் யானைகளை என் கண்ணாலேயே நான் பார்த்தேன். பல்லவ சைனியத்திலோ மொத்தம் நூறு யானைகளுக்கு மேல் கிடையாது. அப்படியிருந்தும் எட்டு மாத காலம் வாதாபி சைனியத்தை வடபெண்ணைக் கரையிலேயே நிறுத்தி வைத்திருந்தோம். இது எதனால் சாத்தியமாயிற்று தெரியுமா ? பாரத யுத்தத்தில் பஞ்ச



பாண்டவர்களின் வெற்றி ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய அறிவு பலத்தினாலும் அர்ச்சுனனுடைய வில்லின் வீரத்தினாலும் சாத்தியமாயிற்று. இந்த நாளில் கிருஷ்ண பகவானும் அர்ச்சுனனும் ஒரே உடம்பில் மகேந்திர பல்லவராக அவதரித்திருக்கிறார்கள், ஐயா!''

''தம்பி! சக்கரவர்த்தியிடம் உன்னுடைய பக்தியைக் குறித்து மிகவும் சந்தோஷம். எனக்குச் சக்கரவர்த்தி என்ன சொல்லி அனுப்பினார்? அதைச் சொல்லு!'' என்று ஆயனர் கேட்க, பரஞ்சோதி கூறினார் :

''புலிகேசியின் படைகள் வடபெண்ணையைக் கடந்துவிட்டன, ஐயா! வேங்கியை வென்ற புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனன் படைகளும் சேர்ந்து கொண்டிருக்கின்றன. இனி, அவற்றை வெகுகாலம் தடுத்து நிறுத்துவது அசாத்தியம் ! ஆகையினால்தான் காஞ்சிக் கோட்டையை முற்றுகைக்கு ஆயத்தம் செய்ய என்னைச் சக்கரவர்த்தி அனுப்பி வைத்தார். ஒரு வருஷமோ, இரண்டு வருஷங்களோ, முற்றுகை நீடித்திருக்கலாம். ஆகையால், கோட்டைக்குள்ளிருந்து அநாவசியமான ஜனங்களையெல்லாம் வெளியேற்றப் போகிறோம். கோட்டையைச் சுற்றிலுமுள்ள கிராமங்களிலிருந்தும் ஜனங்கள் வெளியேறும்படி இருக்கும். இது பற்றித்தான் தங்களுடைய விருப்பத்தைத் தெரிந்துகொள்ளும்படி சக்கரவர்த்தி எனக்குக் கட்டளையிட்டார். எதிரி சைனியம் வரும் சமயம் தாங்கள் இங்கே இருப்பது உசிதமாயிராது.....''

''ஆஹா ! இந்த அரண்ய வீட்டிலேயிருந்தும் சக்கரவர்த்தி என்னைத் துரத்திவிடப் பார்க்கிறாரா? எந்த ராஜா எந்தப் பட்டணத்துக்கு வந்தாலென்ன, போனாலென்ன? இந்தக் காட்டுக்குள்ளே வந்து என்னை யார் எட்டிப் பார்க்கப் போகிறார்கள்? பார்த்தால்தான் இங்கிருந்து என்னத்தை எடுத்துக் கொண்டு போகப் போகிறார்கள் ? இந்தக் கற்சிலைகளையும் கல் உளிகளையும் வேணுமானால் கொண்டு போகட்டும். சுவரிலே எழுதிய சித்திரங்களை வேணுமானாலும் சுரண்டிக் கொண்டு போகட்டும்!.....''

''ஐயா! தாங்கள் ஏதோ கோபத்தில் பேசுகிறீர்கள்! பல்லவ இராஜ்யத்துக்கு எப்பேர்ப்பட்ட ஆபத்து வந்திருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்ளாமல் பேசுகிறீர்கள்......''

'' சக்கரவர்த்தி எங்களுக்கு என்னதான் கட்டளையிடுகிறார் ?''

'' தாங்களும் தங்கள் குமாரியும் காஞ்சிக் கோட்டைக்குள்ளேயே வந்து இருந்தாலும் இருக்கலாம்; அல்லது சோழ நாட்டுக்குப் போய்த் தங்கள் சிநேகிதர் நமசிவாய வைத்தியருடன் சில காலம் தங்கியிருந்தாலும் இருக்கலாம். திருவெண்காட்டுக்குப் போவதாயிருந்தால், தக்க பாதுகாப்புடன் தங்களை அனுப்பி வைக்கும்படி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். தங்கள் விருப்பம் எதுவோ, அப்படிச் செய்யலாம்'' என்றார் பரஞ்சோதி.

'' சிவகாமி ! நீ என்ன அம்மா சொல்லுகிறாய் ?'' என்று கேட்டார் ஆயனர், திரும்பிப் பார்த்து.

ஆனால், சிவகாமி நின்ற இடத்தில் அவளைக் காணவில்லை. (தொடரும்)

# போஷாக்கு அவசியம்

## குழந்தை முதல் முதியோர் வரை குதூகல வாழ்க்கைக்கு

உங்கள் உணவில் பல ஊட்டச்சத்துக்கள் இல்லாமல் இருக்கலாம். ஆல்பொ-சாங் அக் குறையைப் போக்கி, அச்சத்துக்களை உங்களுக்கு அளிக்கிறது. கால்ஷியம், பாஸ்பேட்டுகள், கனிச்சத்துக்கள், அத்தியாவசியமான ஊட்டச் சத்துக்கள், சக்தி மிக்க இந்திய ஔஷதங்கள் ஆகியவற்றினால் ஆன ஆல்பொ-சாங் நல்ல ஆரோக்கியத்தைப் பெற சிறந்த ஒரு டானிக். வளரும் குழந்தைகள், பாலூட்டும் தாய்மார்கள், வயதானவர்கள் மற்றும் உங்கள் குடும்பத்தில் உள்ள அனைவருக்குமே ஏற்றது ஆல்பொ-சாங்.

ஆல்பொ-சாங் நீங்கள் உண்ணும் சாதாரண உணவை முழுமையாக்கி, ஜீரணசக்தியைத் தூண்டி விடுகிறது. உணவுச் சத்துக்கள் உடலில் நன்கு கிரகிக்கப்படுவதற்கு உதவுகிறது. அத்துடன் உங்கள் நரம்புகள் சோர்ந்து விடாதபடி பாதுகாக்கிறது. ஆல்பொ-சாங் பவுடர் வடிவிலும், மாத்திரை வடிவிலும் கிடைக்கிறது. மாத்திரைகள் சர்க்கரை சேர்க்கப்படாதவை, எனவே நீரிழிவு நோய் உள்ளவர்களும் சாப்பிடலாம்.






## ஆல்பொ-சாங்

உங்கள் குடும்பத்தினர் அனைவரையும் இயற்கையான ஆரோக்கியத்துடன் இருக்கச் செய்கிறது.



ஜே & ஜே. டிஷேன்
லேபொரேட்டரீஸ் பிரைவேட் லிமிடெட்.
ஹைதராபாத்

---

## தலைவலியா? உடல்வலியா? ஃப்ளூவா?



FDS AS/1919 TM

# ஸலோஃபென்

## வலி நிவாரண மாத்திரை

**அமிர்தாஞ்சன் லிமிடெட் தயாரிப்பு**

தலைவலி, ஃப்ளூ, பல்வலி, உடல்வலி ஆகியவற்றிலிருந்து ஸலோஃபென் உடனடியாக நிவாரணம் அளிக்கிறது. அது நம்பகமானது. டாக்டர்கள் கையாளும் மருத்துவ முறைப்படி ஸலோஃபென் தயாரிக்கப்படுகிறது.



"சரி... சரி... எங்கேயாவது தொலேஞ் சுட்டு வர்றேன்...'' எரிச்சலுடன் ஆணியில் மாட்டியிருந்த சட்டையை எடுத்து அணிந்து கொண்டேன்.

''ஹூக்கும்... கோபம் மட்டும் பொத் துண்டு வர்றது. குழந்தைக்குப் பால் பவுடர் டின் ஆயிடுத்துன்னு சொல்லி, இரண்டு வார மாகிறது....''

''போதும் போ. இனிமேல் குழந்தையே வேண்டாம்.... குழந்தைக்கு நம்ம அந்தஸ் துக்குத் தகுந்தாற்போல் கஞ்சி — புழுங்கரிசிக் கஞ்சி கொடு போதும்'' என்று கதவைப் படாரென்று சாத்திவிட்டு, தெருவில் கால் வைத்தேன்.

என்னை உரசியபடி ஒரு சைக்கிள் சென்றது.

''சே! என்ன வாழ்க்கையடா இது?... ஒரு நாளாவது சந்தோஷமிருக்கு உண்டா?.... எப்பப் பார்த்தாலும் ஒரே அழுகை... ம்.... வாங்குகிற சம்பளத்திலே கல்யாணம் வேண் டாம்னேன். அம்மா கேட்டாளா? வழக்கமாப் பாடற பல்லவி... 'தலே வலிச்சா, யார் வெந் நீர் போட்டுத் தருவா... அப்படி இப்படின்னு சொல்லிக் கல்யாணத்தைப் பண்ணி வைச்சா. இப்போ யார் அவஸ்தைப் படறது?''

எதிரில் வந்த கைவண்டிக்காரன், ''ஸாரே! கம்னு போ ஸாரே... நீயே ரோட்டிலே தனி யாப் பேசிக்கிட்டே போறே... யாராவது ஏதாச்சும் நெனேச்சுக்கப் போறான்'' என்று சொல்லிக் கொண்டே போனான்.

''சர்தாம்பா... நீ உன் வேலையைப் பார்த் துக்கினு போவியா!... ம்... என்னைப் போல் எவ்வளவோ பேரு தெரியுமா!...''

மங்கள விலாஸ் ஹோட்டலில் நுழைந் தேன். என்மேல் இடிக்காத குறையாகச் சென்ற சைக்கிள்காரர் பக்கத்தில்தான் உட்கார இடம் கிடைத்தது.

''ஸாரி... ஸார்....! சைக்கிள் மேலே இடிச்சுட்டதா?'' என்று பரிவுடன் கேட்டார்.

''...சே அதெல்லாம் ஒண்ணுமில்லே.... நானும் கவனித்து நடக்கணும் இல்லையா?... ஏதோ பேசிண்டே வந்ததுலே பார்க்கலே.''

ஸர்வர் வந்தான். சைக்கிள்காரர் அவ னிடம் வழக்கமான கேள்வி கேட்க, அவனும் யந்திரம் போல் ஒப்பித்தான். அவர் இட்டிலி கேட்டார் கடைசியில்! என்னைப் பார்த்தான்.

''பூரி, கிழங்கு!''

ஸர்வர் சந்தோஷமாகப் போனான்.

''ஸார்! கோபித்துக் கொள்ளக் கூடாது... வீட்டிலே ஏதாவது சண்டையா?...''

எனக்கும் இதுமாதிரி யாராவது கேள்வி கேட்க மாட்டார்களா என்றிருந்தது. ஒரு வடிகால் வேண்டுமே!

''...ஆமாம் ஸார்.... எல்லாம் இந்த விலே வாசிக் கொடுமை, இல்லாத கொடுமைதான். யானைக்குப் பால் பவுடர் டின் தர்ற அரசாங் கம் குழந்தைக்குத் தர முடியல்லே....ம்... பாவம், அந்த யானையும் செத்துப் போச்சு!... எந்தக் குழந்தை சாபம் கொடுத்ததோ!''

சைக்கிள்காரர் சிரித்து விட்டார். ''பரவா யில்லே ஸார். நீங்க துக்கப்படற சமயத்திலே யும் சிரிக்க வைக்கிறீங்க...''

என் வீட்டுக்காரி போடும் சண்டையைச் சொன்னேன். என் எரிச்சலையும் சொன்னேன்.

அப்பொழுது ஸர்வர் அவருக்கு இட்டிலியை வைத்துவிட்டுத் தண்ணீர் தம்ளர்களை வைத்

# வடிகால்



தான். அஜாக்கிரதையால் ஒரு டம்ளர் மேலே சரிய, தண்ணீர் என் சட்டை, வேஷ்டியை நனைத்தது.

நான் ஒன்றும் பேசாமல் சட்டையின் நனைந்த பகுதியைப் பிழிந்தேன். சர்வரின் கண்கள் கெஞ்சின.

''என்னப்பா, பூரி என்னாச்சு?'' என்று நிதானத்துடன் கேட்டேன்.

''பூரி இல்லே ஸார்... இன்னும் அரை மணி நேரம் ஆகும்... பஜ்ஜி கொண்டு வரட்டுமா?''

தலையாட்டினேன்.

சைக்கிள்காரர் என்னைப் பார்த்தார். ''என்ன ஸார்! அந்த ஸர்வர் இப்படித் தண்ணீரைக் கொட்டிட்டுப் பேசாமல் நிற்கிறான். நீங்களும் ஒன்றுமே கேட்காமல் இருந்துவிட்டீர்களே!...''

''...போகட்டும்... அவனும் வேணும்னு கொட்டினான்? கை தவறுதல். திட்டினால் மட்டும், சட்டை உடனே உலர்ந்து போய் விடுமா?''

''அது சரி... பூரி இல்லேன்னு நிதானமாச் சொல்றான். அதை முன்னாடியே சொல்லி இருக்கக் கூடாது?... இவங்களை யெல்லாம் இப்படிச் சும்மா விடக் கூடாது ஸார். நாக்கைப் பிடுங்கிக்கிற மாதிரி இரண்டு கேள்விகள் கேட்டுடணும்.''




''...ஸார்! அவன் என்ன பண்ணுவான்? நம்பகிட்டே கேட்டபோது பூரி இருந்திருக்கும். இவன் போய் வர்றதுக்குள்ளே ஆகி யிருக்கலாம். அதைச் சமாளிக்க ஏதாவது சாக்குச் சொல்லலாம்...'' என்று நிதான மாகச் சொன்னேன். தொடர்ந்து, ''அது மட்டுமில்லே, ஸார்! இவன் வீட்டிலேயும் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கலாம். அந்த மனக் கவலையிலே செய்யற வேலையிலே கொஞ் சம் கவனம் தப்பி யிருக்கலாம்!'' என்றேன்.

''அட போங்க ஸார்! நீங்க ஒண்ணு... வீட்டிலே ஆயிரம் கவலே இருந்தா அதை வெளி இடத்திலே காட்டணுமா என்ன?'' என்றார் சைக்கிள்காரர்.

அப்பொழுது பக்கத்து மேஜையில் ஒரு சிறு கலாட்டா. ஸர்வர் அயிட்டங்களைத் தவறுத லாகக் கொண்டு வந்து விட்டான்.

''என்னப்பா, ஸர்வர்... கேட்டது ஒண்ணு கொண்டு வர்றது வேறே!... விலை போகாத அயிட்டங்களைத் தலையில் கட்டுகிறயா நீ?... எடுப்பா... எடு...'' இருதாக்காரர் ஒருத்தர் விரட்டினார். அவர் குரல் உயர்ந்துகொண்டே இருந்தது.

அருகில் இருந்தவர், ''அட வரதா! விடப்பா. சப்பாத்தி கேட்டாய், பரோட்டா வந்திருக்கு... சாப்பிடப்பா!'' என்று சமா தானம் செய்தார்.

''அதெப்படி வேதகிரி... இந்த ஸர்வரை யெல்லாம் உதைக்க வேணும்?...'' என்று இருதா துள்ளினான்.

ஸர்வர் வந்து பிளேட்டை எடுத்துக் கொண்டு போனார்.

வேதகிரி, ''வரதா! ஆபீசிலே உன்னை மானேஜர் கூப்பிட்டு 'டோஸ்' விட்டார் என்பதையும், உனக்கு ஆத்திரம் இருப்பதை யும், இப்படியா ஸர்வரிடம் காண்பிப்பது...? சே!'' என்றார்.

நான், அருகில் இருந்த சைக்கிள் காரரிடம் சொன் னேன்: ''கேட்மர் களா ஸார்!.... சாப்பிட வர்றவங்க ளோட கோபத் துக்கும், எரிச்சலுக்கும் ஆளாகிறவர்கள் ஸர்வர்கள்தான்! இவங்க மட்டும் தங்கள் எரிச்சலை இப்படிக் காட்டலாமா? ஸர்வரும் மனிதன்தானே?''

ஸர்வர் வந்தார். பஜ்ஜி சூடாகவே இருந்தது.

''காப்பி!'' என்றேன்.

சைக்கிள்காரர் கைகழுவிவிட்டு வந்தார். என்னை அதிசயத்துடன் பார்த்தார்.

''ஏன் ஸார்! நானும் வந்ததிலேயிருந்து பார்க்கிறேன். உங்க வீட்டுச் சண்டையைப் பற்றிக் கோபமாகச் சொன்னீர்கள்; விலை வாசியைப் பற்றி ஆத்திரமாகப் பேசினீர்கள்; ஆனால் ஸர்வர் தண்ணீரைக் கொட்டின போதும் சரி, பூரி இல்லை என்று சொன்ன போதும் சரி, தேவையானதைக் கேட்க வழக்க மான கேள்வியைக் கேட்காமல் நறுக்

கென்று சொன்னபோதும் சரி... ஒரே மாதிரி அமைதியா இருக்கிங்களே... நான் கூட உங்களை மாதிரி அந்தச் சகிப்புத் தன்மைக்குப் பயிற்சி பண்ணிக்கணும் ஸார்... எப்படி ஸார் உங்களாலே அப்படி இருக்க முடிகிறது?'' என்று அவர் ஆவலுடன் கேட்டார்.

ஸர்வர் காப்பி கொண்டு வந்து வைத்த பொழுது மறுபடியும் சிறிது சட்டையில் சிந்தியது. பொறுமையாக இருந்தேன்.

''பில்!''

என்னைச் சைக்கிள்காரர் பின்தொடர்ந்தார். 'பில்லை'க் கொடுத்து விட்டுக் கீழே இறங்கும்பொழுது அவரிடம் சொன்னேன்: ''என் சகிப்புத்தன்மை எட்டு வருஷங்களாக வளர்த்துக்கிட்டு வர்றது. நானும் ஒரு ஸர்வர்; அதனால்தான்!''

நடையைக் கட்டினேன். அவர் பிரமித்துப் போய் நின்றார்.

## ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ அள்ளித் தெளிக்க......

நண்பர்களுடன் உரையாடுகையில் ஜோக்குகள் தெளித்துக் கொண்டிருந்தால் போர் அடிக்காமல் இருக்கும். 'தமாஷ் பேர்வழி' என்று பாராட்டுவார்கள்! 'இதற்கு எப்படிப் பட்ட ஜோக்குகளைச் சொல்லலாம்?' என்று கோடி காட்ட ஒரு தொகுப்பு நூலையே வெளியிட்டு விட்டார் ஹெர்பர்ட் ப்ரோச்னன். அதிலிருந்து சாம்பிள்கள் :

□ மானேஜர் குமாஸ்தாவைக் கேட்டார்: நீ வேலை செய்யும்போது விசிலடிப்பது உண்மையா?



''இல்லவே இல்லே; நான் விசில் அடிக்கும்போது வேலை செய்வதே யில்லே!''

□ லாண்டரிக்காரரிடம் வாடிக்கையாளர் துணியைக் காட்டி இரைந்தார்: ''என்னய்யா இது! நீ சலவை செய்யும் லட்சணம்?''




''ஏன் ஸார், 'கர்சீப்'பை நன்றாகத்தானே வெளுத்திருக்கிறேன்.''

''நாசமாய்ப்போச்சு! இது நான் சலவைக்குக் கொடுக்கும்போது வேஷ்டியாகத்தானே இருந்தது!''

□ 'ஸ்காட்டிஷ்காரர்'கள் சிக்கனத்துக்குப் பெயர் போனவர்கள் என்பது உலகறிந்த விஷயம். ஒரு கூட்டத்தில் பேச்சாளர், ''எல்லோரும் இப்போது உண்டியல் கொண்டு வருபவரிடம் ஆளுக்கு ஒரு டாலர் வீதம் போட வேண்டும்'' என்று கேட்டுக்



கொண்டார். உண்டியல் நெருங்க நெருங்கக் கூட்டத்திலிருந்த மூன்று ஸ்காட்லாந்துக்காரர்களுக்கு வியர்த்துப் படபடத்தது. உடனே ஒரு யுக்தி செய்தார்கள். மூவரில் ஒருவர் சரேலென மயக்கமாக விழுந்தார். மற்ற இருவரும் அவரை வெளியே எடுத்துச் சென்று விட்டார்கள்!

□ காட்டு வழியில் போய்க் கொண்டிருந்த ஒருவரைத் திடீரென்று நிறுத்தி ஒருவன் துப்பாக்கியைக் காட்டி: ''மரியாதையாகப் பணம், மோதிரம் எல்லாவற்றையும் கொடுத்துவிடு; இல்லாவிட்டால்?'' என்றான்.



''இல்லாவிட்டால்...?''

''அனாவசியமான கேள்வி கேட்டு என்னைக் குழப்பாதே. இதுதான் என் முதல் கொள்ளை!''

தொகுப்பு: முரளி

# வளரும் குழந்தைகளுக்கு வாய்ப்பான துணை இன்க்ரிமின்*!

துள்ளித் திரியும் கன்றுப் பருவம்...ததும்பி வழியும் சக்தி...பொங்கிப் பெருகும் பூரிப்பான ஆரோக்கியம்!

இதுதான் வளரும் பருவம். உடலும் உள்ளமும் ஓங்கி வளரும் இச் சமயத்தில் உங்கள் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் வழங்கி வாருங்கள். பலனளிக்கும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, அதி முக்கிய அமினோ அமிலம், வளரும் பருவத்தில் அத்தியாவசியமான இவை அனைத்தும் அடங்கியது இன்க்ரிமின் டானிக்.

## இன்க்ரிமின்*




வளரும் பருவம்!

**இன்க்ரிமின் டானிக் வளரும் பருவத்தினருக்கு ஒரு வரப்பிரசாதம்**

டாக்டர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர் Lederle சயனமைட் இந்தியா லிமிடெட்டின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் சயனமைட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

SISTAS-INC-3068A TAM

**பண்டைக்காலமாக பழனி சித்தர் வைத்தியசாலை உண்மையான முறையான நேர்மையான வைத்திய சேவை புரிகிறது!**

## வாலிப - வயோதிக - அன்பர்களே!

**பழனி சித்தர் மருந்துகளே பாரில் உயர்ந்தது என்பது உலகம் அறிந்த உண்மை!**

---

பிரபல பழனி

வைத்திய திலகம் — வைத்திய ராஜ்



**Dr. S. காளிமுத்து**

R.M.P. (IND) V.V.C. A. M.I.H.

தங்களின் உடல் மிகவும் பலமில்லாமல் இளைத்து உடல் வலுவில்லாமல் குடும்ப வாழ்க்கையில் நிம்மதியில்லாமல் வயோதிகரைப்போல் களைப்பு மேலிட்டு வேலைகளைச் சரிவர செய்ய இயலாமை— இதனால் கஷ்டப்படுகிறீர்களா? வாலிப வயதில் தெரிந்தும், தெரியாமலும் செய்கிற தவறுதல்களே, இப்போது உடல் கெட்டு பலவீன மடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலவீனம், உடல்வலி, களைப்பு, தூக்கக் குறைவு, ஆயாசம், பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி தாய் தந்தையரிடமும் மற்றவர்களிடமும் சொல்ல முடியாமல் மன வேதனையும் கஷ்டமும் அடைந்து, நிம்மதியில்லாமல் வாழ்கிறார்கள். மேற்படி காரணங்களால் உடல் நலம் பாதிக்கப்பட்டவர்களும், கவலைப்படவேண்டாம். இம்மாதிரியான வியாதியஸ்தர்கள் 76 வருட அனுபவம் பெற்ற நமது சாஸ்த்ரீய முறையான மிக உயர்தரம், உயர்தரம், முதல் தரம், இரண்டாந்தரம் எதுவாகிலும் சாப்பிட்டாலே எடை அதிகப்பட்டு, இரத்த விருத்தியுடன் உடல் பலமடைந்து புதிய சக்தி, புத்துணர்ச்சி பெற்று நிம்மதியான வாழ்க்கை வாழலாம். எவ்விதமான பத்தியமும் இல்லை, ஆர்டரில் தேவைப்பட்ட மருந்தின் விலைகளைக் குறிப்பிட்டு எழுதவும். வி.பி.பி. தபால் பார்சலில் பெற இன்றே எழுதுங்கள். சென்னையிலும், பழனியிலும், கேம்புகளிலும் நேரில் பெறலாம். மருந்தும் விருந்தும் மூன்று நாள் என்பது பழமொழி. மருந்து உபயோகிக்கும்பொழுதே பலனைக் காணலாம். வி. பி. பி. செலவு இலவசம். வெறும் கடிதம் கவனிக்க இயலாது. சித்த வைத்திய மருந்துகளும், பழனி மருந்துகளும் நல்ல பயன் தரும் என்பதை அறியவும்.

**ஒரு மாதம் சிகிச்சை மருந்துகள் : மிக உயர்தரம் ரூ. 90**

**உயர்தரம் : ரூ. 42. முதல் தரம் ரூ. 33. இரண்டாந்தரம் : ரூ. 24**

**எங்கள் மாபெரும் வெற்றிகரமான மாதாந்திர சுற்றுப்பயண தேதி விலாசங்கள் கவனிக்கவும்**

**கிளை : 41, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை - போன் : 21448**

சென்னைக் கிளை ஆபீஸில் 1ந் தேதி முதல் 7 வரை : மீண்டும் 15ந் தேதி முதல் 21 வரை நேரில் விஜயம்

GOVT. REGD. T. M. No. 204341 — REGD. 15443

**வைத்திய திலகம் வைத்திய ராஜ் டாக்டர் S. காளிமுத்து**

## பழனி சித்தர் வைத்தியசாலை (K) பழனி – 624601

போன் : 316, 316-A (தியேட்டர் ஸ்ரீ ரங்கராஜா பக்கம்) தந்தி : சித்தர்

வீடு : 420

# விண்ணும் மண்ணும்

**இது வரை . . .**

இந்திய பாதுகாப்புத் துறையின் துப்பறியும் இலாக்கா (D M I) வைச் சேர்ந்த தனஞ்செயன் நியூயார்க்பயணமாகிறான். விசேஷ உலோகக் கலவைகள் கொண்ட எஃகுக் குழாய்கள், தகடுகள் முதலானவற்றை ஏற்றுமதி செய்யும் வாய்ப்புக்களை ஆராய அரசாங்க, வர்த்தக கார்ப்போரேஷன் சார்பில் செல்வது போல் வேஷம் போடுகிறான். ஆனால் அவனது உண்மை நோக்கம் வேறு.

அமெரிக்காவின் தேசிய விண்வெளிப் பயண நிர்வாக நிறுவனத்துக்காக (NASA) பணியாற்றும் பலப்பல விஞ்ஞானிகளுள் ஒருத்தி அனுபமா. அவள் இந்தியப் பெற்றோருக்குப் பிறந்தவளானாலும், பிறந்தது, வளர்ந்தது, படித்துப் பட்டம் பெற்றது, வேலை பார்ப்பது எல்லாம் அமெரிக்காவில் தான். அவள் பெற்றோர் அமெரிக்கப் பிரஜைகளாக மாறி நீண்டகாலமாகிவிட்டது.

அனுபமாவைப் பற்றி இந்திய அரசு ஓர் அமெரிக்கத் துப்பறியும் நிறுவனம் மூலம் நிறையத் தகவல்களைத் தெரிந்துகொண்டிருந்தது. அந்த அறிக்கையையும் புகைப்படங்களையும் நுணுகி ஆராய்ந்திருந்த தனஞ்செயன் ஏற்கனவே அவளுடன் பல நாள் பழகியிருப்பது போன்ற உணர்வைப் பெற்றிருக்கிறான். அவளை எப்படியாவது வற்புறுத்தி இந்தியாவுக்கு அழைத்து வந்து விட வேண்டும் என்பது அவனுக்கு இடப்பட்டுள்ள பணி.

அனுபமா மைக்கேல் என்னும் சக விஞ்ஞானியுடன் நெருங்கிப் பழகி வந்தாள். அந்த நட்பு காதலாக மலர்ந்திருக்கிறதா இல்லையா என்பது தெளிவாகத் தெரியவில்லை என்றாலும் அவளை அழைத்துப் போக மைக்கேல் தடையாக இருப்பான் என்று தனஞ்செயன் எதிர்பார்க்கிறான்.

திடீரென்று அனுபமா எதிரில் போய் நின்று தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வதை விட வர்த்தக நிமித்தம் அமெரிக்கா வந்துள்ள ஓர் இந்தியன் யதேச்சையாக இன்னொரு இந்தியப் பெண்ணைச் சந்தித்து நட்பை வளர்த்துக் கொள்வது போலிருந்தால் அவளையும் மைக்கேலையும் ஆழம் பார்க்கச் சௌகரியமாயிருக்கும் என்ற முடிவுக்கு வருகிறான் தனஞ்செயன்.

இதன்படி ஒரு நைட்கிளப்பில் அவர்களைச் சிநேகம் பிடித்துக் கொண்டு விட, மூவருமாக அங்கிருந்து சேர்ந்து புறப்படுகிறார்கள். நியூயார்க்கின் பிராட்வே பகுதி விளம்பர வண்ண விளக்குகளால் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அந்த ஒளிச் சிதறல்களினிடையில் அனுபமாவின் எழில் வடிவத்தைச் சற்று நிதானித்து ரசிக்கிறான் தனஞ்செயன். 'புகைப்படங்களில் காணப்பட்டதைவிட இவள் அழகாக இருக்கிறாள்' என எண்ணுகிறான். அருகில் நிற்கும் மைக்கேலின் உள்ளத்தில் இலேசான கலக்கம் ஏற்படுகிறது.

**இனி மேலே . . .**

**கி.ராஜேந்திரன்**

# 5. கண்கொள்ளாக் காட்சிகள்

மஞ்சளும் கறுப்பும் சிவப்பும் கோடுகளாகவும் கட்டங்களாகவும் விளங்கிய இலேசான டெர்ரிகாட் வண்ணச் சேலையை உடுத்தியிருந்தாள் அனுபமா. புடைவையிலிருந்த அதே மஞ்சள் நிறத்தில் ஸ்லீவ்லெஸ் ஜாக்கெட். கரே லென்றிருந்த அவள் கேசம் காதுக்குக் கீழே அதனை அன்புடன் அணைப்பது போல்வளைந்து சுற்றிக் கொண்டிருந்தது. காதில் இருந்த தோடு விலை உயர்ந்தது அல்ல. மஞ்சள் நிறத்தில் ஒரு செயற் கைக்கல்தான். ஆனால் உடைக்குப் பொருத்தமாக அகலமாக அழகாக இருந்தது. நெற்றியில் தெரிந்தும் தெரியாமலுமாக ஒரு சிறு மஞ்சள் பொட்டு. ஹேர்பின் கொண்டு பொருத்தப்பட்டிருந்த ஒரே ஒரு மேரி கோல்ட் மலர் 'இதோ விழுந்து விடுவேன்' என்று பயமுறுத்திக் கொண்டிருந்தது. தனஞ்செயன் அவளைத் தீண்ட அது ஒரு வாய்ப்பளித்ததால் மனமார அதனை வாழ்த்தினான். அதனைச் சரிப்படுத்தி விட்டு அப்படியே அவளை அள்ளிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்துக்குத் தடை விதித்துவிட்டு ஒரு விரலால் அவள் காதின் எல்லையை மட்டும் வருடிவிடத் தனக்குத் தானே அனுமதி வழங்கிக் கொண்டான்.

விளையாடிய அவன் கரத்தைப் பற்றி விலங்கிட்டது போல் பிடித்துக் கொண்ட அனுபமா, சிலிர்ப்பு அடங்கியதும், ''இரவு நேரத்தில் இந்தக் காட்சி மிக அழகாக இருக்கும் என்பதால் அழைத்து வந்தேன்'' என்றாள்.

''ஆமாம், ரொம்ப அழகாகத்தான் இருக்கிறது'' என்றான் தனஞ்செயன், அவள் மேனியின் மீதிருந்த தன் பார்வையைத் திருப்பாமல்.

அவள் இலேசாகச் சிரித்து, ''நான் மான்ஹாட்டன் நீலைவக் குறிப்பிடுகிறேன்'' என்றாள். ஆயின் தன் அலங்காரத்தை அவன் காண வேண்டும் என்ற ஆவலும் அவளுக்கு இருப்பது தனஞ்செயனுக்கு வெளிப்படையாகவே தெரிந்தது. ஏனெனில், இலேசான குளிர் ஆரம்பமாகியிருந்த போதிலும் பாதகமில்லை என்று அவள் ஓவர் கோட்டை அணியாமல் கரத்திலேயே மடித்துப் போட்டிருந்தாள்.

அவர்கள், 'மன்ஹாட்டன் க்ரூயிஸ்' என்று வழங்கப்படுகிற படகுப் பிரயாணத்தை மேற்கொண்டிருந்தார்கள். படகு என்றால் ஏராளமான சாமான்களையும் உல்லாசப் பயணிகளையும்



காரியார்த்தமாகச் செல்பவர்களையும் ஏற்றுக் கொள்ளக்கூடிய மிகப் பெரிய ஒன்று. இயந்திரங்களின் இயக்கம் கொண்டது. சிறு கப்பல் என்றே சொல்லலாம். அது போட்ட சத்தத்துக்கு மேலாகக் குரலைச் சற்று உயர்த்திப் பேச வேண்டியிருந்தது. படகு பார்ப்பதற்கு அப்படி ஒன்றும் அழகானதல்ல. ஆனால் அதிலிருந்தபடி நோக்கும்போது இந்தச் சிறு பயணத்தில் தென்படும் காட்சி அதி அற்புதமானதொன்று. நியூயார்க்கின் ஓர் அங்கமான மான்ஹாட்டன் தீவுதனை இந்தப் பெரிய படகின் மேல் தளத்திலிருந்து காண முடிந்தது. ஒரு பக்கம் உலகப் பிரசித்திபெற்ற சுதந்திர தேவியின் சிலை சக்தி வாய்ந்த மின் விளக்குகளின் ஒளியில் கனவுலகத் தோற்றமாய் விளங்கியது. இப்பால் மான்ஹாட்டனின் வானோங்கி உயரும் ஏராளமான கட்டடங்களில் ஜன்னலுக்கு ஜன்னல் சிறு சிறு சதுரங்களாக வெளிச்சம். இருட்டுப் பின்னணியில் ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கப்பட்டுக் கோபுரமாய் உயர்ந்த ஒளிக் கட்டடங்கள். நீரில் அவற்றின் பிரதிபலிப்பு மெல்லலைகளுக்கு ஏற்ப நெளிந்து இன்பக் கிளுகிளுப்பை ஏற்படுத்தியது. இந்த இனிய காட்சியிலிருந்து சிரமப்பட்டுச் சற்று மேலே தலையை உயர்த்தினால் முழு மதியானது, 'மனிதன் என்னிடமிருந்து பாறைகளைப் பறிக்கலாம். ஆனால் என் ஒளியைப் பறிக்க முடியுமா ?' என்று கேட்பது போலவும், 'என்னை வெற்றி கொண்டுவிட்டதாக மனிதன் நினைக்கலாம். ஆனால் மனித மனத்தை அடிமைப்படுத்துவதை நான் நிறுத்த மாட்டேன்' என்று ஆர்ப்பரிப்பது போலவும் கம்பீரமாய்த் தோற்றம் அளித்தது.

''சந்திரனுடன் சேர்த்து இந்த மன்ஹாட்டன் காட்சியைப் பார்க்கும்போது தேவலோகத்தில் தீபங்களேற்றிக் கார்த்திகை கொண்டாடுகிறார்களோ என்று பிரமிப்பா யிருக்கிறது. கூடவே நீயும் ஓர் அப்ஸரஸாக மாறிவிடுகிறாய்'' என்றான் தனஞ்செயன்.

கடலின் மெல்லலைச் சிரிப்புக்கு இணையாக அவளும் களுக்கென்று நகைத்தாள். '''மோர் ராயல் தேன் இ



கிங்' என்பார்கள். அது போலத்தான் அமெரிக்காவுக்கு வந்த நீங்கள் அமெரிக்கர்களைவிட ஒரு படி மேலே போய் விட்டீர்கள், அடிவருடலில்!''

''வாஸ்தவம்'' என்று அவனும் புன்னகை செய்தான். ''ரொம்ப நாட்கள் அந்நியோந்நியமாகப் பழகியிருந்தால் ஒழிய இந்தியாவில் ஒரு பெண்ணிடம் இப்படியெல்லாம் பேசினால் கன்னத்தில் ஓர் அடி விழும். அமெரிக்காவில் இப்போதுதான் சந்திக்கிற ஒரு நங்கையிடமும் இப்படிப் பேசாவிட்டால் பண்புக் குறைவாகக் கருதப்படும்!''

''ஆக, ஒரு மரியாதைக்காகத்தான் என்னைப் பற்றி இவ்வளவும் சொல்கிறீர்கள்!'' குறும்புச் சிரிப்பு குமிழியிட்டது அவள் இதழ்களில்.

''இல்லவே இல்லை; படகில் ஏறியது முதல் நானும் மான்ஹாட்டனின் எழில் தோற்றத்தை மட்டுமே பார்க்க வேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறேன். ஆனால் உன் அலங்காரம் என் தலையை அடிக்கடி தன்பால் இழுத்து நிறுத்தி வைக்கிறது!''

''உண்மையிலேயே உங்களுக்கு இந்த அலங்காரம் பிடிக்கிறதா? உங்களுக்காகத்தான் அணிந்து வந்தேன், இந்தியப் பாணியில். இந்த ப்ளௌசைக் கூட நானேதான் வீட்டில் தைத்துக் கொண்டேன், இந்திய ஃபேஷன் பத்திரிகை ஒன்றைப் பார்த்துவிட்டு.''

''முன்பு அமெரிக்கப் பாணியில் உடையணிந்திருந்தபோதும் அழகாகத்தான் இருந்தாய். நெற்றியில் அந்தச் சின்னஞ்சிறு பொட்டு மட்டும் இல்லாதிருந்திருந்தால் அமெரிக்கப் பெண் என்றே முடிவு கட்டியிருப்பேன்!''

''என் அம்மா அந்த ஒரு விஷயத்தில் மட்டும் கண்டிப்பானவள். அமெரிக்காவிலேயே பிறந்து வளர்ந்து அமெரிக்கப் பிரஜையாகவும் விளங்குவதனால் வேறு பல அமெரிக்கப் பெண்களைப் போல் கேச அலங்காரம் செய்து கொள்வதிலும், உடையணிவதிலும் எனக்குத் தயக்கம் ஏற்படுவதேயில்லை. வசதியாக இருப்பதால் அதையே விரும்பவும் செய்கிறேன். அதுவும் வேலை பார்க்கும் பெண்களுக்கு ஸ்வெட்டர், ஸ்கர்ட் போல் சௌகரியம் வேறு எதுவுமில்லை. ஆனால் கண்ணுக்குத் தெரியாமல் சின்னஞ் சிறிய' அளவிலாவது ஒரு பொட்டு இட்டுக் கொள்ள வேண்டும் என்று அம்மா உத்தரவு.''

''உன் பெற்றோர்களைப் பார்க்க வேண்டும் எனக்கு. ஒரே சமயத்தில் விஞ்ஞானமேதையாகவும், எழிலரசியாகவும், பண்பின் பெட்டகமாகவும் திகழும்படி ஒரு பெண்ணைப் பெற்றெடுத்து வளர்ப்பது எப்படி என்ற இரகசியத்தை அவர்களிடம் கேட்டறிந்து கொள்ள வேண்டும்.''

''புகழ்ச்சிப் புலவர் வரவிருக்கிறார் என்று அவர்களை எச்சரித்து வைக்க அவகாசம் தாருங்கள்; அப்புறம் வரலாம்!''

அவள் பழகு தமிழின்றி இலக்கண சுத்தமாகப் பேசினாலும் உச்சரிப்பிலே மழலை மாறாதிருந்தது. இந்த விநோதச் சேர்க்கை அவன் இதயத்தில் குறுஞ் சிரிப்பாக மலர்ந்து மணத்தது. 'அவ்வப்போது சில ஆங்கிலச் சொற்கள் புகுந்தாலும் பரவாயில்லை. தனித்திருக்கும்போதாவது என்னுடன் தமிழிலேயே பேச' என்று அவன் கேட்டுக் கொண்டிருந்தான்.

''நாளை மாலை வரையில் அவகாசம் தருகிறேன், போதுமா?'' என்று கேட்டான் தனஞ்செயன். ''உன் வீட்டுக்கு வந்து அவர்களைக் காண்பதென்பதை அதற்குமேல் ஒத்திப் போடாதே. நியூயார்க் வந்து ஒரு வார காலம்தான் ஆகிறது என்றாலும் அதற்குள் நாக்குச் செத்துவிட்டது. காரசாரமாக ஏதாவது சாப்பிட்டு அதற்கு உயிரூட்ட வேண்டும். ஆனால் நீ என்னை விருந்துக்கு அழைத்துத்தான் ஆக வேண்டுமென்ற கட்டாயமில்லை.''

''அழைக்கத்தான் அழைப்பேன். நீங்கள் வந்துதான் ஆக வேண்டும்.''

''நான் மாட்டேன் என்றாலும் நீ விடப் போகிறாயா என்ன? சரி, வந்து சேருகிறேன்.''

அவள் சிரித்தாள்: ''உண்மையிலேயே இது சிரஞ்சீவி ஹாஸ்யம்தான்!''

திடும் என்று படகிலிருந்த விளக்குகளை அணைத்துவிட்டார்கள், மான்ஹாட்டன் நீவின் ஒளி மயமான இரவு நேரக் காட்சியை மையிருட்டின் மையத்திலிருந்தபடி பார்த்தால்தான் முழுமையாக அனுபவிக்க முடியும் என்பதால். இருள் சூழ்ந்ததும் சட்டென்று அவள் ஏதோ ஒரு பாதுகாப்பைத் தேடுவது போல் பரபரப்புடன், கரத்தில் அது வரையில் தொங்கிக் கொண்டிருந்த ஓவர்கோட்டை எடுத்து அணிந்து கொண்டாள்.

மௌனமாக அவன் அவளுக்கு உதவினான். அவள் மனம் அவனுக்குப் புரிந்தது. என்னதான் இருந்தாலும் அவன் இரண்டே நாட்கள் பழகியுள்ள அந்நியன். தயக்கமும் இலேசான பயமும்கூட அவளுக்கு இருப்பது நியாயமே. அமெரிக்காவில் வாழ்ந்

தானும் அவனுள் ஓடுவது இந்திய ரத்தம்தானே! அவனிடம் அவனுக்கு மதிப்பு உயர்ந்தது.

'அஞ்சாதே! அளவுக்கு அதிகமாய், வரம்பு மீறி உன்னிடம் பழகமாட்டேன்' என்று உறுதி அளிப்பது போல் அவன் வலக் கரத்தால் அவள் இடது தோளைப் பற்றினன், எட்ட இருந்த படியே. அவள் நம்பிக்கையுடன் அவனை நெருங்கினள்.

''மறைக்காமல் சொல்லுங்கள்! என்னிடம் பழகுவதில் உங்களுக்கு ஏதோ ஓர் உள் நோக்கம் இருக்கிறது. இல்லையா?'' என்றாள்.

# 6. கனவுகள் முடிந்தன!

ஆல் ஹிர்ட் எழுப்பிய ஜாஸ் இசை அனுபமா எதிர்பார்த்தது போலவே தனஞ்செயனுக்கு மிகவும் பிடித்திருந்தது. துவாரங்களை மூடித் திறக்கப் பட்டன்களைக் கொண்ட உலோகப் புல்லாங்குழலை அவர் வாசித்தார். ஒரு சமயம் இதயத்தை உருக்கினர், வேறு ஒரு சமயம் பந்தாடினர், பிரிதொரு சமயம் அமைதி மிக்க பரமானந்த நிலைக்குக் கொண்டு சென்றார். பின்னணி இசையும் அடக்கத்துடன், ஆனல் ஆற்றலை அவ்வப்போது வெளிப்படுத்துவதாக அமைந்திருந்தது.

சுமார் ஒரு மணி நேரம் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு வெளியே வந்த போது தனஞ்செயன் அனுபமாவுக்கும் மைக்கேல் டேவிஸ்ஸுக்கும் நன்றி தெரிவித்தான்.

''நல்லவேளை! இப்படி ஓர் இசையைக் கேட்க என்னை நீங்கள் அழைத்துப் போகாதிருந்திருந்தால் அமெரிக்க இசை குறித்தே படு மட்டமான முடிவுக்கு வந்து நாடு திரும்பியிருப்பேன் நான்'' என்றான்.

''பல்வேறு நாட்டு மக்களும் வந்து குடியேறி ஒரே சமூகமாக மாறி அமெரிக்கர் என்று தங்களை வர்ணித்துக் கொள்வதில் பெருமையுற்று உழைத்ததால் வல்லரசாக உருவான தேசம் இது. அதனல் இங்கே ரவிசங்கரின் ஸிதாரையும் கேட்கலாம், பெல்ஜியன் காங்கோவின் யுத்த நடன இசையையும் கேட்கலாம். சீனத்து அரிசி உணவையும் ருசிக்கலாம். அலாஸ்காவிலிருந்து வந்த ஸீல் இறைச்சியையும் உண்ணலாம். எது எங்கே கிடைக்கும் என்று விசாரித்து அறிய வேண்டும்'' என்றான் மைக்.

''ஆமாம், பான்கேக் ஹவுஸ்களில் தோசைகூடச் சாப்பிடலாம்'' என்றாள் அனுபமா.

''அதைச் செய்வோம் முதலில்!'' என்று வயிற்றைத் தட்டிக் காட்டினன் தனஞ்செயன்.

எல்லோரும் மைக்கேலின் கார் நிறுத்தப்பட்டிருந்த இடத்துக்குத் திரும்பி நடந்து வந்து ஏறிக் கொண்டார்கள். அமெரிக்காவில் ஏராளமாய் உள்ள பான்கேக் ஹவுஸ்களில் ஒன்றை நாடிச் சென்றது அது. உருளைக் கிழங்கு பான் கேக்கும் தயிரும் மூவருக்கும் கொண்டு வரச் சொன்னாள் அனுபமா.

ஒன்று, இரண்டு, மூன்று என்று அதையே திரும்பத் திரும்பச் சாப்பிட்டான் தனஞ்செயன். ஊத்தப்பம்போல் மிக நன்றாயிருந்தது. 'மிளகாய்ப்பொடி மட்டுமிருந்தால்.....' என்று ஏங்கினன்.

வஞ்சனை இல்லாமல் அவன் விழுங்குவதைக் கண்டு அனுபமாவுக்குத் தாய்மை உணர்வு பொங்கியது.

''போதுமா? நிஜமாகவே போதுமா? சங்கோசப்படாதீர்கள்!'' என்றெல்லாம் கேட்டாள்.

அப்புறம் அவனை ஹோட்டலுக்குக் காரிலேயே அழைத்துப் போய் இறக்கி விடுவதாகப் பிடிவாதம் செய்தாள்.

''எனக்குத் திரும்பிப் போகத் தெரியும், வழி தப்பாது'' என்று அவன் எவ்வளவு கூறியும் அவள் கேட்கவில்லை.

ஹோட்டலை நெருங்கியதும் தனக்கும் மைக்கேலுக்கும் நடுவில் முன் ஸீட்டில் அமர்ந்திருந்த அனுபமாவைப் பார்த்து, ஆனல் மைக்கையும் உள்ளடக்கியதுபோல் தொனிக்குமாறு,

''நாம் மீண்டும் எப்போது சந்திக்கப் போகிறோம்?'' என்றான் தனஞ்செயன்.

''இந்தக் கேள்வி பிறக்குமோ என்று எண்ணித்தான் பயந்து கொண்டிருந்தேன்'' என்றாள் அனுபமா.

''இதற்குப் பயப்படுவானேன்?'' என்றான் மைக் டேவிஸ். ''வீக்கெண்டாக இருப்பதால் கேட்கிறேன். ஊர் திரும்புமுன் நியூயார்க்கைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் இருக்காதா, அவனுக்கு?''

''டூரிஸ்ட் பஸ்கள் நிறைய உள்ளன. ஃபோன் செய்துவிட்டால் ஹோட்டலுக்கே வந்து அழைத்துப் போய்விடும்.''

''ஐயோ, படுபோர்!'' என்றான் தனஞ்செயன். ''நான் தன்னந் தனியாக மனம் போன போக்கில் சுற்றின



" Ding dong Bell
Nixon's in the Well
What put him in?
A mania to win.
Will some one pull him out?
That, I greatly doubt.

—இது வாட்டர்கேட் நிகழ்ச்சிக்குப் பிறகு அமெரிக்காவில் பிரபலமாகி வரும் ஒரு நர்ஸரி ரைம்.

- ஸண்டே வோர்ல்ட்

-பாபு

---

னும் கற்றுவேனே ஒழிய டூரிஸ்ட் கும்பலுடன் சேர்ந்து கைதட்டி விசிலடிக்கும் போதெல்லாம் ஓடி வர என்னால் முடியாது !''

மைக்கேல் குபீரென்று சிரித்தான். ''அவன் சொல்வதில் ரொம்ப நியாயம் இருக்கிறது அனுபமா. சனி ஞாயிறில் நீ என்ன செய்யப் போகிறாய்? அவனுக்குத் துணையாகப் போகக்கூடாதா?''

'' நான் யாரையும் கட்டாயப்படுத்த விரும்பவில்லை'' என்று ஓர் அவசரத்துடன் இடைமறித்தான் தனஞ்செயன்.

''இது சுதந்திர நாடு. யார் யாரை வற்புறுத்த முடியும் ?'' என்றான் மைக்கேல்.

'' மைக் ! நாளை நமக்கு வேறு காரியங்கள் இருப்பதை மறந்துவிட்டுப் பேசுகிறாய் '' என்றாள் அனுபமா. ''நீச்சல் குளத்துக்குப் போய்விட்டு அப்படியே ரோட்டரி மீட்டிங்குக்கு...''

'' ஓ ! உன்னிடம் சொல்ல மறந்துவிட்டேன்; அதையெல்லாம் ரத்து பண்ணியாகிவிட்டது. நாளை நான் என் அம்மாவைப் பல் டாக்டரிடம் அழைத்துப் போக வேண்டும்.''

அது அப்பட்டமான பொய் என்பது அனுபமாவுக்குப் புரிந்தது. ஓர் இந்தியப் பெண்ணாகிய நான் இன்னொரு இந்தியனுடன் பழகுவதற்குக் கிடைத்த ஒரு வாய்ப்பை இழக்க விரும்பாதிருக்கலாம். அதற்கு இடையூறாகத் தான் இருக்கக் கூடாது என்ற எண்ணத்தில் மைக் புளுகுகிறான். பெருந்தன்மையுடன் ஒதுங்கிக்கொள்ள எண்ணுகிறான். தான் தனஞ்செயனைச் சந்திக்க ஒப்புக் கொண்டு சரியென்று சொன்னால் மைக்கேல் தவறாக எடுத்துக் கொள்ளவே மாட்டான். ஆனால் தீர்மானமாக 'என்னால் முடியாது' என்று மறுத்துவிட்டால் மைக்கேல் சொல்லிமுடியாதசந்தோஷமடைவான்.

ஆனால் அந்தச் சந்தோஷத்தை அவனுக்கு அனுபமா அளிக்கவில்லை. முடியாது என்று முகத்தில் அடித்தாற் போல் ஓர் இந்தியப் பெண்ணாகிய அவளால் இன்னொரு இந்தியனிடம் கூற முடியவில்லை என்பதல்ல, காரணம். தன்னைக் கர்வக்காரி என்று அவன் முடிவுகட்டிவிடக் கூடாதே என்ற கவலையும் இல்லை. 'முடியாது' என்று பளிச்சென்று கூறிவிட முடியாதபடி அவன் அவளிடம் ஏதோ ஒருவிதமாக ஈர்க்கப்பட்டாள். அதற்கு என்ன அர்த்தம் என்று அவளுக்குப் புரியவில்லை. அவன் அவளிடம் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டவிதம், பேசிப் பழகிய முறை, வேடிக்கை செய்தது, சிரித்தது எல்லாம் அவளுக்குப் பிடித்திருந்தது. அதோடு அவன் அவளிடம் வலிய வந்து உறவாடுவதற்குக் காரணம் என்ன என்று யோசித்தாள். 'மோகமா? அல்லது இன்னும் ஒரே ஒரு நாள் நட்பை மட்டும்தான் கோருகிறானா ? அல்லது இவ்விரண்டுக்கும் மேலாக வேறு ஏதேனும் உள் நோக்கம் உண்டா?' அசம்பாவிதமாக நடந்து கொள்வானேயானால் தன்னைத் தானே காத்துக் கொள்ளத் தெரியாதவளா அவள்?

''காலை பத்து மணிக்கு அறையிலிருந்து ஹோட்டல் 'லாபி'க்கு இறங்கி வந்துவிடுங்கள். நான் அங்கே தயாராக இருப்பேன்'' என்றாள் அனுபமா.

குறித்த நேரத்தில் அவன் தன் காரில் வந்து சேர்ந்தான். இருவரும் ப்ராங்ஸ் ஸூ செல்வதென்று தீர்மானித்தார்கள். நியூயார்க் நகர எல்லைக்கு அப்பால் விசாலமான நிலப் பரப்பில் மிருகங்கள் இயற்கைச் சூழலில் இருப்பதுபோலவே கம்பிக் கூண்டுகள் இன்றித் திரியவிடப்பட்டிருந்தன. மனிதர்கள் நடமாடுகிற பாதையையும் மிருகங்கள் இருந்த நிலப்பரப்பையும் ஆழமான அகழிகள் பிரித்து வைத்துப் பாதுகாப்பு அளித்தன. ஆனால் இந்த அகழிகள் மிகுந்த சிரமப்பட்டால் ஒழியக் காண முடியாதவாறு மறைவாக அமைக்கப்பட்டிருந்ததால், 'இதோ புலி நம்மைப் பார்த்துவிட்டது, எந்த விநாடியும் நம் மீது பாயலாம்' என்கிற பிரமை ஏற்



மிருதங்க வித்வான்: என்ன பைனாகுலரை வைத்துக்கொண்டு பார்க்கும்போதாவது ரசிகர்கள் யாராவது தென்படுகிறார்களா?

---

பட்டது. சாதுவான மிருகங்களையும் கொடிய விலங்குகளையும்கூட இவ்வாறே அகழிகளால் பிரித்து வைத்து, 'அட, பக்கத்திலேயே இருக்கும் மான் மீது பாயாமல் சிறுத்தை சும்மா இருக்கிறதே!' என்று காண்பவர்கள் வியப்படையுமாறு செய்திருந்தார்கள். மதியத்துக்கு மேல் பிரும்மாண்டமான மெட்ரோபாலிடன் மியூஸியம் சென்று சுற்றிப் பார்த்தார்கள். ''உங்கள் நிலைமை என்னவோ, என் கால்கள் கெஞ்சுகின்றன'' என்றாள் அனுபமா.

மூலைக்கு மூலை தென்படுகிற காப்பி பார்களுள் ஒன்றில் அமர்ந்து இளைப்பாறினார்கள். ''என்ன வேண்டும்?'' என்று கேட்டுக் கொண்டு அருகில் வந்து நின்ற பெண்ணிடம் வாஃபின் கொண்டு வரச் சொன்னாள் அனுபமா. அதன் மீது மேபிள் ஸிரப்பைத் தாராளமாக ஊற்றிக் கொண்டு சாப்பிட்ட போது உருவத்தில் மாறுபட்டிருந்த போதிலும் ருசியில் அவன் தாயார் செய்து தரும் மனோகரம் போலிருப்பதை உணர்ந்தான் தனஞ்செயன். அடுத்து ஒவ்வோர் அமெரிக்கனும் ஆண்டு தோறும் அண்டா அளவுக்கு விழுங்குகிற முதல்தரமான காப்பியில் இரண்டு கப் இவர்களுக்கு வந்து சேர்ந்தது. அதை ருசித்தபடியே, ''இன்று மாலைப் பொழுதை எப்படிக் கழிக்கப் போகிறோம்? ஏதாவது நைட் கிளப்புக்கு இந்த அப்பாவியை அழைத்துப் போகப் போகிறாயா என்ன?'' என்று கூச்சமடைந்தவன் போல் நடித்து நெளிந்தான் அவன்.

''ஆளை அப்படியே மயக்கிச் சொக்க வைக்கிற ஒரு காட்சி இருக்கிறது. போகலாம்'' என்றாள் அவள் குறும்புப் புன்னகையுடன்.

துகிலுரிக்கிற காட்சிகளை உடைய கணக்கற்ற கிளப்புகளுள் ஒன்றுக்குத் தான் விஜயம் செய்யப் போவதாக எண்ணியிருந்த தனஞ்செயன், அவள் குறிப்பிட்ட காட்சி, 'மான்ஹாட்டன் தீவின் இரவுநேரத் தோற்றம்தான் என்பதை உணர்ந்தபோது சிறிதும் ஏமாற்றம்அடையவில்லை. அவள்கூறியது நூற்றுக்கு நூறு உண்மைதான். ஆளை அப்படியே மயக்கிச் சொக்க வைப்பதாகத்தான் இருந்தது அந்தத் தோற்றம்.

அவள் தன்னிடம் நெருங்கிப் பழகுவதைத் தப்பர்த்தம் செய்து கொள்ளக் கூடாது என்று தனஞ்செயன் அறிந்திருந்தான். ஒருநாள் பொழுதை அவனுடன் கழிப்பதாக ஒப்புக் கொண்டதால் அவள் அவனைக் காதலித்துக் கசிந்து உருகுவதாக எண்ணி விடலாகாது. பிறந்து வளர்ந்த சூழ்நிலை காரணமாகத்தான் அவள் அவனுடன் தாராளமாகப் பழகுகிறாள். இருந்தாலும் அவள் உடனிருப்பதில், அவளை அருகில் வைத்துக் கொண்டு நியூயார்க்கின் அழகுகளை ரசிப்பதில் மகிழ்ச்சி தன் இதயத்தில் கரை புரண்டு ஓடுவதையும் புரிந்து கொண்டான்.

இதே உணர்ச்சிகளின் பிரதிபலிப்புத் தான் அவளிடமும் இருக்கும் என்று எண்ணியிருந்த தனஞ்செயனுக்குத் தான் அவளுடன் உறவாடுவதில் ஓர் உள்நோக்கமும் இருப்பதை அவள் ஊகித்துக் கேட்டு விட்டதானது திகைப்பை அளித்தது. இதை அவளுக்கு அறிவித்தது புத்தி கூர்மையா அல்லது உள்ளுணர்வா என்று சில வினாடிகள் பிரமித்துவிட்டுக் கூறினான்:

''உண்மைதான் அனுபமா! ஓர் உள் நோக்கத்துடனேயேதான் உன் நட்பைப் பெற்று வளர்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அதைச் சொல்லவே எனக்குத் தயக்கமாயிருக்கிறது இப்போது. நமது சிநேகம் இப்படியே கவலையற்றதாக, உல்லாசமானதாக நீடிக்கக் கூடாதா என்ற ஏக்கம் என்னைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. நிஜமான காரணங்களை விவரிக்கப் போனால் கவலைகள் நம்மைச் சூழும். இந்த மகிழ்ச்சி இருந்த இடம் தெரியாமல் ஓடிவிடும். ஒரு டூரிஸ்டாகவே இருக்கக் கூடாதா நான்?''

''எத்தனை நல்ல கனவுகளானாலும் அவற்றுக்கு முடிவுண்டு என்பார்கள். சொல்லுங்கள். அதிர்ச்சிகளை ஏற்கத் தயாராயிருக்கிறேன்'' என்றாள் அனுபமா.

(தொடரும்)



பம்பாய் பவர் கேபிள்ஸ் லிமிடெட்டின் புராஜக்ட் என்ஜினியர் திரு கே. எஸ். **பரமேசுவரன்** பி.ஈ.,எம்.எஸ். (U. S. A.) அவர்களுக்கும், சௌ. **ராமலக்ஷ்மி** பி.எஸ்ஸி.க்கும் பம்பாயில் அதிவிமரிசையாகத் திருமணம் சமீபத்தில் நடைபெற்றது. மணமகன் பம்பாய், சோமையா குரூப் கம்பெனியின் தொழிலக ஆலோசகர் திரு கே.என். சுந்தரம் அவர்களின் புதல்வர். மணமகள், யு.எஸ்.ஏ.யிலுள்ள பிரிஸ்டல்-மையர்ஸ் ஸ்தாபனத்தின் பிரதிநிதி திரு ஜி.என். அய்யர் அவர்களின் புதல்வி. திருமணத்துக்கு நண்பர்களும், நகரப் பிரமுகர்கள் பலரும், உறவினர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

# ஆசைகள் மடிவதில்லை 3

கதை: கௌசிகன் சித்திரம்: சூர்யா..

முரளி கேட்டுக் கொண்டபடி சதீஷ் சிறைச் சாலைக்குப் போகிறான், மல்லிகாவைக் காண-



















நான் நம்புகிறேன். வேறு யார் கொலை செய்திருக்கக் கூடும்?
தெரியாது...
நீங்கள் இதனால் யாரையும் காப்பாற்ற முயற்சி செய்யவில்லையே?
இல்லை.
தர்மராஜனை அவர் மனைவி மேனகாவே கொன்றிருக்கலாமோ?
தெரியாது.. தெரியாது.. எனக்குத் தெரியாது.


தர்மராஜனின் அந்தரங்கத்துக்கும் நம்பிக்கைக்கும் உரியவராக நீங்கள் இருந்தீர்களில்லையா? அவருடைய சொத்தின் மதிப்பு எவ்வளவு?
பல லட்சங்களுக்கு அதிபர். ஓர் உயில் கூடத் தயாரித்தார், மூன்று மாதங்களுக்கு முன்பு. நான் கூடச் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளேன்.


அந்த உயில் படி நன்மை அடைவது யார், மேனகாவா?
இல்லை. தர்மராஜன் தம் மனைவியை விஷமாக வெறுத்தார். சொத்தை யெல்லாம் தருமத்துக்கு எழுதி அதற்கென ஒரு டிரஸ்ட் ஏற்படுத்தி மனைவிக்கு அவள் ஆயுள் வரை மாதம் முந்நூறு ரூபாய் மாத்திரமே கொடுக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிறார்.


அது போகட்டும், உனக்காக வழக்காட லாயர் சோம சுந்தரத்தை நியமிக்க வேண்டுமென்று உனக்கு எப்படித் தோன்றியது?
நானா நியமித்தேன்? அவராக வலிய வந்தார் எனக்காக வாதாட. பிரபலமாகி விட்ட வழக்காயிற்றே. பெயர் பெறுவதற்காக ஆசைப் படுகிறாராக்கும் என்று சம்மதித்தேன்.


எனக்காக வழக்காட ஊதியம் எதுவும் வேண்டாம் என்றும் கூறினார்.
தர்மராஜன் சார்ந்துள்ள சமூகத்தின் மிகப்பெரிய அறக்கட்டளை அமைப்பில் காலியாகியுள்ள ஒரு முக்கிய பதவிக்குச் சோமசுந்தரம் நியமிக்கப்பட்டிருக்கிறார் என்றாவது தெரியுமா உனக்கு?


என்ன? அந்தப் பதவிக்குச் சோமுவா? தர்மராஜன் அப்பதவியை அவருக்குத் தரக் கூடாது என்பதில் பிடிவாதமாக இருந்தாரே. அதற்கான கடிதங்களை அவர் சொல்ல நான் டைப் செய்து அனுப்பியுள்ளேன்.
மல்லிகா, அந்த அறக்கட்டளைப் பதவி நியமனம், அந்த உயில் ஆகியவை பற்றி உனக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்லு.
தொடரும்

# வருகுது ஒரு
# புதிய மென்மை
# உங்கள் துணிகளுக்கு:
# புதிய லக்ஸ் பவுடர்




துணிகளுக்கு மென்மை-
யூட்டும் விசேஷப் பொருள்கள்
உள்ளன புதிய லக்ஸ் பவுடரிலே.
மதிப்பரிய ஆடைகளை அவை
புதுக் கருக்கான மென்மையோடு
பெறுகின்றன...சலவைக்கு சலவை.

மென்னயம் கொஞ்சும் லக்ஸ்
சலவையிலே...பட்டாடைகளுக்குப்
பூப்போன்ற மெல்லிழைவு*...இராக் கால
உடைகள், ப்ரா, அனைத்துக்குமே அரவணைப்பான பராமரிப்பு...விலையுயர்ந்த
காருக்கான ஆடைச் செல்வங்கள் சட்டைகளுக்கும், சிந்தெடிக் துணிகளுக்கும்
அதி உன்னதமான பொலிவு. சலவைக்குரியது லக்ஸ்...மென்மை தவழும் பவுடர்.

சென்னையிலும் பெங்களூரிலும்
மட்டுமே கிட்டும்.



* இந்தியாவிலே, சர்வதேசக்
கம்பனிச் செயலகத்தின்
நற்சான்றாகிய வுல்மார்க் முத்திரை
பெற்ற ஒரே ஒரு சலவைப்
பவுடர் லக்ஸ்.

## நேர்த்தியான துணிகளைப் புதுக் கருக்கான
## மென்மையோடு வைத்திருப்பது புதிய லக்ஸ் பவுடர்

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-LXP-3-140 TH

டேபிள் டென்னிஸ் தேசிய சாம்பியன் பட்டம் பெற்றவுடன் மஞ்சித் துவா, கான்டீனுக்கு அருகில் இருட்டில் கிடந்த ஒரு மேஜையின்மேல் அமர்ந்துகொண்டு வெற்றிக் கரங்களில் ஐஸ்க்ரீமை வைத்து, மனம் குளிரச் சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்!

அவரது வெற்றியை வாழ்த்த வந்த ரசிகர் கூட்டம் அவரது வெற்றிக் கரங்களைக் குலுக்க முடியாமல் அவஸ்தைப்பட்டது; 'கங்க்ராஜுலேஷன்ஸ்' என்ற வாழ்த்தொலியோடு திரும்பியது. மஞ்சித் துவாவின் தந்திரம் இது!



"நான் இரண்டு மாதங்கள் வடகொரியாவில் மிஸ்டர் கிம்மிடம் கடுமையான பயிற்சி மேற்கொண்டேன். அவர் ஆட்டப் பயிற்சியோடு ஒவ்வொரு நாளும் உடற் பயிற்சி, ஓட்டம், ஸ்கிப்பிங், ஜிம்னேஸியப் பயிற்சிகளையெல்லாம் மேற்கொள்ளச் சொன்னார். இவையெல்லாம் என்னை ஆட்டத்தில் விறுவிறுப்போடு இயங்க வைத்தன!" என்றார் பத்தொன்பது வயதே ஆன தேசிய சாம்பியன்.

"இந்திய தேசிய சாம்பியன் பட்டம் முதல் தடவை பெறும் தாங்கள் வடகொரியாவைத் தவிர வேறு அயல்நாடுகளுக்குச் சென்றிருக்கிறீர்களா?"

"ஓ! 1973 காமன்வெல்த் டேபிள் டென்னிஸ் போட்டியில் கலந்து கொண்டேன். யுகோஸ்லாவியாவில் நடந்த உலக டேபிள் டென்னிஸ் போட்டிக்குச் சென்றேன். பீகிங்கில் ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க சாம்பியன்ஷிப்பில் பங்கு பற்றினேன். எண்பது நாடுகள் போட்டியிட்ட இந்தப் போட்டியில் சென்ற வருஷ சாம்பியன் என். ஆர். பஜாஜும் நானும் இரட்டையர் ஆட்டத்தில் செமி பைனல்வரை வந்து இந்தியாவுக்கு மூன்றாவது ஸ்தானத்தைப் பெற்றுத் தந்தோம்!" என்றார் இந்திய தேசிய சாம்பியன் மஞ்சித் துவா.

சென்ற வருஷ தேசிய சாம்பியன்பஜாஜும், 1970ம் வருஷ தேசிய சாம்பியன் ஜெகந்நாத்தும் இந்த வருஷம் மஞ்சித் துவாவின் அபார ஆட்டத்துக்குப் பட்டத்தைப் பறி கொடுக்கும்படி ஆயிற்று. ஆனால் மகாராஷ்டிர காப்டன் என். ஆர். பஜாஜ் 'டீம் சாம்பியன்ஷிப்'பில் முதல் இடம் பெற்றார்.

* * *

பெண்கள் தேசியப் போட்டிகள் எட்டு மேஜைகளில் நடந்து கொண்டிருந்தன.

# துவா அடைந்த வெற்றி சாதனையில் சேர்த்தி!

இடது கை ஆட்டக்காரர் மஞ்சித் துவா டில்லி சர்வகலாசாலையைச் சேர்ந்த இந்துக் கல்லூரியில் பி. ஏ. பட்டம் காணப் படிக்கும் மாணவர். தேசிய டேபிள் டென்னிஸ் சாம்பியன் பட்டம் அதை முந்திக்கொண்டு விட்டது!

"உங்கள் வெற்றியின் ரகசியம் என்ன?" என்று குல்லாய் அணிந்த மஞ்சித் துவாவிடம் வினவுகிறோம்!

"கொஞ்சம் பொறுங்கள். அவர் களைப்பும், ஆட்டச் சூடும் தணியட்டும்!" என்றார் சக ஆட்டக்காரர் தீபக் வாடேரா.

ஐஸ்க்ரீமை முழுதும் தீர்த்துக் கட்டிவிட்டுச் சூடு தணிந்தவராக ஆற அமரப் பேட்டிக்குத் தயாரானார் இளைஞர் மஞ்சித் துவா.

"என்ன ஸார்! பூரிமையைக் காணுமே?" என்று அலை பாய்ந்தார் பத்திரிகை நிருபர் ஒருவர்.

"பூரி கிடைப்பது கான்டீனில்; இன்டோர் ஸ்டேடியத்தினுள் அல்ல. அங்கே போய்ப் பாரும்!"

"உம்ம ஹாஸ்யத்தின் தலையிலே இடி விழ! நான் சென்ற வருஷ பெண்கள் தேசிய சாம்பியன் இந்து பூரியைச் சொல்கிறேன்!"

"அவரா? டைபாய்டு ஜுரத்தில் ராமராவ் க்ளினிக்கில் படுத்திருக்கிறாராம்! ரூபா பானர்ஜி பாடு கொண்டாட்டம்தான்!"

இறுதி ஆட்டம் வரை நன்றாக 'ஆடி'த் தமிழ் நாட்டுக்குப் பெருமை தேடித் தந்த குமாரி பி. வத்ஸலா பயத்தினால் ரூபா பானர்ஜியிடம் 'தேசிய வீராங்கனை'ப் பட்டத்

# பிழைக்கத் தெரிந்தவர்கள்!

கோ. கலைவேந்தன்

தலைபார்த்துப் போட்டிடுவார் குல்லாய்! 'அதுதான்
    தலைபார்த்தே ஓட்டுதலைப் போல' மக்கள்
நிலைபார்த்துப் பிடித்திடுவார் காக்காய்! முகத்து
    நிறம்பார்த்துப் பூசிடுவார் பவுடர்! பொருளின்
விலைபார்த்து வாங்கிடுவார்; வாங்கும் போதும்
    வாய்பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்! வஞ்ச
வலைபார்த்து வீசிடுவார்; விழுவார் தம்மைப்
    பணமங்கைப் பளபளப்பில் மயங்கச் செய்வார்!

பொய்க்கணக்கில் உடல்வளர்ப்பார், பொய்யே யன்றிப்
    பொழுதெதுவும் ஒருவார்த்தை உண்மை சொல்லார்,
எய்க்கணக்கில் சுருட்டிடுவார் பணத்தை வாரி!
    பழங்கணக்கில் ஐந்து ரூபா! இன்றோ லட்சம்!
மெய்க்கணக்கில் வரவுவைக்க விரும்பார், நாட்டு
    மக்களிலே தொண்டனெனப் பீற்றிக் கொள்வார்,
கைக்கணக்கில் அடியாட்கள் கூட்டம் காட்டி
    அதிகாரம் பண்ணிடுவார் பிழைக்கின் றார்கள்!

ஒருமணிக்கோ ஒருகட்சி மாறி மாறி
    ஓடிடுவார்! அறிக்கைபல விடுவார்; அந்தோ!
அரசியலை மேடையாக்கி ஜால வித்தை
    நிகழ்த்திடுவார்! இம்மக்கள் ஆட்டு மந்தை!
உருவளர்க்கத் திருடிடுவார்; கட்சி பேரால்
    நன்கொடைகள் திரட்டிடுவார்; இவர்கள் எல்லாம்
பெருமிதத்தில் வளர்ந்துயிரும் புழுக்கள்! நாட்டில்
    பிழைக்கத்தான் தெரிந்தவர்கள் வாழ்வறியார்கள்!

குறுக்குவழிக் கொலைமனத்தார் கள்ள நோட்டுக்
    குவியல்களை நாடெங்கும் பரப்பி வாழ்வார்!
கருக்குவழி நடந்திடுவார் எக்கா லத்தும்
    கருங்காமல் பொருள்கடத்தல் செய்வார்! காசு
பொறுக்குவழி தெரிந்தவர்கள் மருந்தில் கூடப்
    போலிசெய்து விற்றிடுவார்! ஐயோ! சட்ட
நறுக்குவழி அறிந்தவரும் கழுத்த றுக்கும்
    கருக்கரிவாள் ஆனவரும் பிழைக்கின் றார்கள்!

---

தைக் கோட்டை விட்டு விட்டாள். இந்தப் பட்டமும் 'கனடா'வுக்கு ஏற்றுமதியாகிறது. ஆம்! புது மணம் புரிந்து கொண்டுள்ள ரூபா, டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரரும் இன்ஜினீயருமான பிரசாத் பானர்ஜியோடு கனடாவுக்குப் பறக்கிறார்! பட்டமும் பறக்க வேண்டியதுதானே!

''கனடாவுக்குச் செல்லும் நீங்கள் டேபிள் டென்னிஸ் ஆட்டத்தைக் குடும்ப பாரத்தில் விட்டுவிடுவீர்களா?''

''கனடாவுக்குப் போனாலும் என் ஆட்ட மோகம் குன்றாது. என் கணவரும் ஆட்டக் காரராயிற்றே! அங்கே கனடிய டேபிள் டென்னிஸ் கோஷ்டியோடு ஆடுவேன். என்னோடு ஜப்பானுக்கு 'மாட்ச்' ஆட வந்த ஒருத்தி கனடாவில் குடியேறியிருக்கிறாள். என் ஆட்டம் தொடர்ந்து நடக்கும்!'' என்று உறுதிமொழி கூறினார், இந்திய தேசிய டேபிள் டென்னிஸ் வீராங்கனை ரூபா பானர்ஜி.

கார்ப்பொரேஷன் இன்டோர் ஸ்டேடியத்தில் பத்து நாள் ஆட்டத்தின் பயனாகப் புதுதில்லி தேசிய சாம்பியன் பட்டத்தைக் கொண்டு சென்றது. கர்நாடகத்துக்குத் தேசிய ஜூனியர் சாம்பியன் பட்டத்தைப் பி.யு.சி. மாணவர் அருண்குமார் கொண்டு சென்றார்! தேசிய இரட்டையர் சாம்பியன் ஷிப்பை ஆந்திராவுக்கு அசோக்குமாரும், சாக்லேனும் எடுத்துச் சென்றார்கள். விருந்து உபசாரப் பெருமையைத் தமிழ்நாடு பெற்றது. அந்த மட்டும் லாபம்! — குண்டுமணி

# “மொரமொரப்பாகவும் அதிமெல்லியதாகவும் வடாம் தயாரிக்கும் இரகசியம், பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர்”



என்கிறார் திருமதி வத்சலா சாமா, 'லோரெண்டோ', மவுண்ட் ப்ளஸண்ட் ரோடு, பம்பாய் – 6.

கார்ன் ப்ராடக்ட்ஸ் தேர்ந்தெடுத்த பரிசு - பெற்ற பக்குவ முறை

## வடாம்

தயாரிக்க உதவுவது பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர்






பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர் சமோசா, பட்டீஸ் ஆகியவற்றை அதிமெல்லியதாகவும் மொரமொரப்பாகவும் ஆக்குகின்றது. (இரண்டு கோப்பை சாதா மாவுக்கு 1 டேபிள் ஸ்பூன் அளவு போதுமானது.) குழைவான சுவைமிகு சூப், கிரேவி ஆகியவற்றைக் கெட்டியாகத் தயாரிக்க உதவும். பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர் இளங் குழந்தைகள், நோயாளிகள் ஆகியோருக்குத் தெம்பு தரவும் ஆரோக்கிய மூட்டவும் சிறந்தது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப் பட்டதால் கார்ன்ஃப்ளவர்களில் மிகவும் சிறந்தது, பிரவுன் & போல்ஸன். அட்டைப் பெட்டிகளிலும் கிடைக்கிறது.

**பக்குவ முறை:**

1 கோப்பை பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர்
6 கோப்பை தண்ணீர்
1 முதல் 1½ கோப்பை மோர்
4-5 பச்சைமிளகாய்
சிறிது பெருங்காயம்
1 மேசைக் கரண்டி (தலைதட்டிய அளவு) உப்பு (அல்லது சுவைக்கு ஏற்ற அளவு.)

1 தண்ணீரைக் கொதிக்க விடவும். அடுப்பின் சூட்டைக் குறைக்கவும். பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவரை மோருடன் கலக்கவும். தண்ணீர் சேர்க்கவும். நன்கு கிளறவும். அத்துடன் உப்பு, பெருங்காயம் மற்றும் அரைத்த மிளகாயைக் கூட்டவும். சில நிமிடங்கள் கொதிக்க விடவும். பின்னர் கலவையைக் குளிர விடவும்.

2 பிறகு சுத்தமான போலிதீன் தாளை வெய்யிலில் பரப்பவும். அதன் மீது ஒரு மேசைக்கரண்டியளவு கலவையிலிருந்து எடுத்து ஊற்றவும். இவ்வாறே ஒவ்வொரு மேசைக் கரண்டியாக கலவை முழுவதையும் தாளின்மீது இடைவெளி விட்டு ஊற்றவும். மாலைவரையில் வெய்யிலில் காயட்டும். மறு நாள் காலை தாளிலிருந்து வடாம் பிரித்து எடுத்து, பெரிய தட்டில் பரட்டிப் போடவும். முற்றிலும் காயும் வரையில் இரண்டொரு நாட்களுக்கு வெய்யிலில் நன்கு உலர விடவும்.

3 காற்றுப்புகா டப்பாவில் வடாம் எடுத்து வைக்கவும். தேவைப்படி எண்ணெயில் பொரிக்கவும். வாணலியில் எண்ணெயை விட்டு சூடாக்கி, வடாம் பொரிக்கவும். பழுப்பாக மாறும் முன்பு வடாம் பொரித்து எடுக்கவும்.

---

உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்.



**கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். சோமானி மார்க், பம்பாய் – 400 001.

OBM 0621 R-TM

Prestige

PREETT

# பத்து லட்சத்துக்கும் அதிகமான குடும்பத் தலைவிகள் உபயோகிப்பது பிரஸ்டீஜ்—இந்தியாவில் அதிகம் விற்பனையாகும் பிரஷர் குக்கர்

## காரணம் என்ன?

**அதிகக் கொள்ளளவு:**

பிரஸ்டீஜ் மூடி வெளிப்புறம் பொருந்துவதால், அதிக உணவு சமைக்க நிறைய இடம் கிடைக்கிறது. உள் அடுக்குகள் பெரியவை. காரணம் பிரஸ்டீஜின் கொள்ளளவு வேறு வகை குக்கர்களை விட 1/3 பங்கு அதிகம்.

**அதி வேகம்:**

பிரஸ்டீஜில் உபயோகிக்கப்படும் சிறப்பான அலுமினியக் கலப்பு உலோகம், சீராகவும் விரைவாகவும் சூடு பரவ உதவுகிறது. அதனால் நேரமும் எரிபொருளும் மிச்சம்.

**அதிக பாதுகாப்பானது:**

மூடுவதற்கு இரட்டிப்பு வசதியுள்ள மூடி. மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பிடியுடன் கூடிய ரப்பர் பாதுகாப்பு அடைப்பான், குக்கரை பாதுகாப்பானதாகச் செய்கிறது.

பிரஸ்டீஜ் 6 அளவுகளில் கிடைக்கிறது. வாழ்நாள் முழுவதும் உழைப்பதற்கு உறுதியளிக்கிறது.

உங்கள் பிரஸ்டீஜ் குக்கர் அதி நுட்பமானது. சிறந்த பயிற்சி பெற்ற பழுதுபார்ப்போர் தான் அதை சீராக்க முடியும். விற்பனைக்குப் பிறகும் உங்கள் பிரஸ்டீஜுக்கு விரைவாகவும் தரமாகவும் சீர்பணி புரிய, நாடெங்கும் 200க்கும் அதிகமான ஸர்விஸ் ஸ்டேஷன்கள் இருக்கின்றன. உத்தரவாதமுள்ள 'ஸ்பேர்' பகுதிகளை பிரஸ்டீஜ்/பிரீத் பணி நிலையங்களிலிருந்தும், பிரபல விற்பனையாளர்களிடமிருந்து மட்டுமே வாங்குங்கள்.









டிடி. (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர் 560016

SAA TTP/1008A

“கும்பகோணத்தில் வாழ்ந்த சரப சாஸ்திரிகள் கண் பார்வையற்றவராகத்தான் இருந்தார். அந்த இசைமேதை, வேணுகானம் இசைத்துப் பெரும் புகழ் தேடிக் கொண்டார்.

''அமெரிக்கப் பெண்மணியான ஹெலன் கெல்லர், பிறக்கும்போது ஊமையும் அல்ல, செவிடுமல்ல, குருடுமல்ல. பிறந்த ஒன்றரை ஆண்டுக்குப் பிறகு, இடிரென்று ஒரு நோயினால் பாதிக்கப்பட்டபோது மூன்றும் விடை பெற்றுப் போய்விட்டன !

''ஆயினும் விடாமுயற்சியாலும், குன்று மனோதிடத்தாலும் ஹெலன்கெல்லர் தம்மை உயர்த்திக் கொண்டார். அருஞ் சாதனைகளைப் புரிந்து உலகப் புகழ்பெற்றுவிட்டார்.

''இவ்விருவரது வாழ்க்கைகளும் என் உள்ளத்தில் நம்பிக்கை ஒளி வீசச் செய்தன. அந்த ஒளியில், வாழ்க்கைப் பாதையில் நடந்து செல்வதற்குச் சக்தியைக் கொடுத்தவர் தெய்வத்துக்கு நிகரான என் தாயார் சாருபாலா'' என்று தொடங்கினார் பிரபல வயலின் வித்துவான் திரு எம். சந்திரசேகர்.

கல்கத்தாவில் பிறந்த இவர் நான்கே நான்கு மாதங்கள் வரையிலும்தான் தாய்—தந்தையரையும், உலகையும் பார்த்தார்.



பின்னர் மஞ்சள் காமாலை வந்து படுத்திருக்கையில் — விதி விளையாடிவிட்டது.

''பார்வை போன பிறகு, அம்மாவையும் அப்பாவையும் குரல் மூலம்தான் தெரிந்து கொண்டேன். இரண்டு வயதானபோது பெற்றோர்கள் கண் ஆபரேஷன் செய்ய நினைத்தார்கள். 'ஆபரேஷன் வெற்றி யடையாமல் போய் மூளைப் பாதிப்புக்கு இடமேற்பட்டால் என்ன செய்வது?' என்ற சந்தேகத்தை, ஒரு கண் வைத்திய நிபுணர் எழுப்பவே, 'வேண்டாம்' என்று நிறுத்தி விட்டார்கள்'' என்றார் சந்திரசேகர்.

கல்கத்தாவைவிட்டுச் சந்திரசேகரன் குடும்பம், 1945ல் சென்னைக்கு வந்துவிட்டது. இங்கே குடியேறிய பிறகுதான், சந்திரசேகரின் வாழ்க்கையில் பெரிய மாறுதல் தோன்ற ஆரம்பித்தது.

அகில இந்திய ரேடியோவில் பணிபுரிந்த காலஞ்சென்ற டி. கே. ஜயராம ஐயரிடம் மாணவியாக இருந்து, வயலின் கற்றுக் கொண்டவர் திருமதி சாருபாலா. மேடைக் கச்சேரி செய்யும் தகுதி பெற்றுவிட்டவரும் கூட.

# இழந்தது ஒளி; இழைவது ஒலி!

''எனக்கு ஏழு வயது இருக்கும்போதே அம்மா என்னை வயலின் வாசிக்கச் சொல்லி, எனக்கு ஆசானாகவும் இருந்தார். 'பிரெய்லி' முறையில் படிப்பும் கற்றுத் தந்தார். பூந்தமல்லியில் உள்ள பார்வையற்றோர் பள்ளியிலிருந்து ஓர் ஆசிரியை வீட்டுக்கு வந்து டியூஷன் சொல்லித் தரவும் அம்மா ஏற்பாடு செய்தார். சம்ஸ்கிருதம் கூடச் சொல்லித் தரவும் ஏற்பாடு செய்தார். இந்த அஸ்திவாரங்கள்தாம் நான் இன்று இந்த அளவுக்கு உயர்ந்து நிற்கக் காரணம்'' என்கிறார் சந்திரசேகர்.

கேள்வி: எந்த வயதில் கச்சேரி செய்யத் தொடங்கினீர்கள்?

சந்திரசேகர்: மயிலை தியாகராஜ வித்வத் சமாஜத்தில் 1949ல் பன்னிரண்டாவது வயதில் என் முதல் கச்சேரி நடந்தது. மதுரை ராமபத்ரன் பாட்டுக்கு வயலின் வாசித்தேன். 1950 முதல் பிரபலமான முன்னணி வித்வான்களுடைய இசை நிகழ்ச்சிகளில் வயலின் வாசிக்கும் வாய்ப்புக் கிடைத்து வருகிறது. வயலின் மட்டும் அல்ல; வாய்ப்பாட்டிலும் தேர்ச்சி உண்டு!

''அப்படியா? யாரிடம் சிட்சை?''

''சங்கீத வித்வான் நரசிம்மலு நாயுடு, மன்னார்குடி சாம்பசிவ பாகவதர், கும்பகோணம் சகோதரர்கள், வீணை தனம்மாளின் மகள் டி. ஜயம்மாள் ஆகியோரிடம் சிட்சை பெற்றேன். ஜெயம்மாள் அவர்கள் க்ஷேத்ரக்ஞர் பதங்கள் சொல்லித் தந்திருக்கிறார்.''

1956ல், சந்திரசேகரனுடைய இருபதாம் வயதில், திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. பேரளம் அருகே கொட்டூர் கிராமத்தில் நடந்தது.

நாதசுரச் சக்கரவர்த்தி திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை, திருமண தினத்தன்று மாலையில் மூன்று மணி நேரம் கச்சேரி செய்தார்!

கேள்வி: உலகைக் காண முடியவில்லையே என்ற குறை இருக்கிறதா?

சந்திரசேகர்: கொஞ்சம் கூட இல்லை. பார்வை இல்லை என்ற காரணத்தால் எனக்குச் சில அனுகூலங்கள் கூட உண்டு.

கேள்வி: என்ன அவை?

சந்திரசேகர்: முதலாவது இந்த உலகில் நடக்கும் அநீதி, அக்கிரமங்களைப் பார்க்க முடிவதில்லை. எனக்கு விரோதிகள் இல்லை! அதாவது என்னை யாரும் கெடுக்க நினைக்க மாட்டார்கள். மனம் அலைபாயாமல் எதிலும் நான் ஒருமித்த சிந்தனையைச் செலுத்த முடியும். இதனால்தான் நான் டைப்ரைட்டிங்கில் வெகு சீக்கிரத்தில் தேர்ச்சி பெற முடிந்தது!

கேள்வி: நீங்கள் மிகவும் மகிழ்ச்சி அடையும் நேரம்?

சந்திரசேகர்: மேடையில் வயலின் வாசிக்கும்போது, இசையின்பத்தில் திளைத்து ரசிகர்கள் 'அப்ளாஸ்'கொடுக்கிறார்களே, அப்போது என் மனம் அடைகிற ஆனந்தத்தைச் சொல்லால் வர்ணிக்கவே முடியாது!

''அதே மாதிரி என் மகள் பாரதி பரத நாட்டியம் ஆடும்போது (என்னால் பார்க்க முடியாதுதான்!) ரசிகர்கள் கைதட்டிப் பாராட்டுவதைக் கேட்கும்போதும் என் நெஞ்சு நிறைந்து விடுகிறது. அவளுக்குப் பன்னிரண்டு வயது ஆகிறது.

''தெய்வம் எனக்கு ஒரு குறையைக் கொடுத்தாலும் அது அதிகமாக என் மனத்தைப் பாதிக்காதவாறு வேறு பல பேறுகளைக் கொடுத்திருக்கிறது, சார்!...'' என்னும் போது அவர் குரல் கம்மி விட்டது.

இவருக்குப் பொழுதுபோக்கு ரேடியோ கேட்பது. தக்க துணை கிடைத்தால் மாலையில் உலாவப் போவது. சினிமாவுக்குச் செல்வது. சிவாஜி கணேசனின் படங்கள் ரொம்பவும் பிடிக்கும், வசனத்தைக் கேட்டு நன்றாக ரசிக்க முடியும் என்பதால்.

இவரிடம் பயிலும் பல மாணவர்களுள் குமாரி கன்யாகுமாரி மேடையில் வாசிக்க ஆரம்பித்து விட்டார்.

பேட்டி: **ஏ. சுவாமிநாதன்**

வட்டமேஜை

# திட்டம், பறு மட்டம்!

'**பொ**ருட்களின் பற்றாக்குறை தவிர்க்க முடியாத ஒன்று. வளர்ச்சித் திட்டங்கள் அமுலாக்கப்படும் நிலையில் பற்றாக்குறை என்ற அளவிலேயே நாம் வாழவேண்டும்' என்று பிரதமர் இந்திரா காந்தி அண்மையில் நடைபெற்ற தேசிய வளர்ச்சிக் குழுக் கூட்டத்தில் குறிப்பிட்டுள்ளார். வளரும்நாடுகளில் விலைகள் ஏற்றம் தவிர்க்க முடியாததெனப் பொருளியல் ஆய்வாளர்கள் சிலர் கூறுவது போன்று பிரதமர் அவர்களும், வளரும் நாட்டில் பொருட்களின் பற்றாக்குறையும் தவிர்க்கமுடியாதது என்று ஒப்புமை காட்டியுள்ளார். மேலெழுந்தவாரியாக இப்படிப் பேசிவிடுவது சரியல்ல. பொருட்களின் உற்பத்தி உயர்வைப் பாதிக்கும் காரணங்களே மிக முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியவையாகும். வளர்ச்சி விகிதங்கள் மிக உயர்ந்துள்ள பல நாடுகளில் விலைகளும் உயர்ந்துள்ளன. ஆனால் அந்நாடுகளில் விலையேற்றமும் வளர்ச்சி விகிதமும் ஒன்றோடொன்று இணைந்து இருக்கும். வருமானமும் வளர்ந்து, உற்பத்தியும் உயர்ந்து வருகின்ற நிலையில் பொருட்களின் பற்றாக்குறை என்பது எப்போதோ ஏற்படும் ஓர் அரிய நிகழ்ச்சியாகவே இருக்கும். இந்தியாவில் நிலைமை இத்தகையதாயில்லை.

ரூ. 53,411 கோடி முதலீடு செய்யப்பட இருக்கும் ஐந்தாவது திட்டத்தில் நாட்டின் உண்மையான பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் வகையில் வழிமுறைகள் ஆராயப்படவில்லை. அதிகமான வரிப் பளுவாலும் விலைவாசி ஏற்றத்தாலும் பல இக்கட்டுகளை அனுபவிக்கும் மக்கள் இனி எதிர்காலம் எவ்வாறு இருக்குமோ என்று ஐயப்படுகின்றனர். ஐந்தாவது திட்ட காலத்தில் இன்னும் அதிகமான வரி விதிக்கப்பட வேண்டும் என்று அரசு முடிவெடுத்துள்ளது. இதற்கு எல்லையே கிடையாதா என்று மக்கள் வருந்துகின்றனர். ஏற்கெனவே அதிகமாக உள்ள வரி விகிதங்கள் மேலும் அதிகரிக்கப்பட்டால், பொருள்களின் விலைகள் மேன்மேலும் உயரும். மக்கள் இன்னும் சங்கடங்களுக்கு உள்ளாவார்கள்.

ஐந்தாவது திட்டம் யதார்த்த நோக்கில் அமையவில்லை என்று சிலர் குற்றம் சாட்டும் போது பிரதமர், மகாத்மா காந்தியும், பண்டித நேருவும் கூட முறையான திட்டங்களை அளிக்கவில்லை என்று குறிப்பிட்டுள்ளார். மறைந்த தலைவர்கள் நடைமுறைக்கொவ்வாத திட்டங்களை அளித்தார்கள் என்று பிரதமர் குற்றம் சாட்டுவது அழகல்ல. கடந்த கால நிகழ்ச்சிகளை யல்லாது, எதிர்காலத்தில் கையாளப்பட வேண்டிய செயல்முறை நடவடிக்கைகள் பற்றிப் பேசுவதுதான் பிரதமருக்குச் சிறந்தது; நாட்டுக்கும் நல்லது.

தொழிலியல், வேளாண்மைத் துறை பற்றிய சீரான செயல்முறைத் திட்டங்களை உற்பத்தி உயர்வுக்கு வழிகோலும் வண்ணம் கடைப்பிடிக்க வேண்டும். முதலீடு வளம் பெருகும் வகையில் நிதியியல் திட்டங்கள் தீட்டப்பட வேண்டும். தொழிலியல் பற்றிய திட்டங்கள், பல்வேறு பொருட்களின் உற்பத்திப் பெருக்கத்துக்கு வழிகோலும் வண்ணம் அமைக்கப்பட வேண்டும். பொருட்களைப் பகிர்வு செய்யும் முறையிலும் பல மாற்றங்கள் ஏற்பட வேண்டும். முக்கியமாக, பொருட்களைப் பகிர்வு செய்வதில் அரசாங்கக் கட்டுப்பாட்டை நீக்க வேண்டும். அரசாங்கக் கட்டுப்பாட்டை நீக்கிவிட்டால் தனியார் நிறுவனங்கள் ஒன்றோடொன்று போட்டியிட்டு, ஒன்றையொன்று மிஞ்சும் வகையில் பொருட்களைச் சிறந்த முறையில் பகிர்வு செய்யும். பொருட்களின் பற்றாக்குறை நீங்கும்; வளம் பெருகும்.

28–12–73

சென்னை பேராசிரியர் சி.எஸ். மகாதேவன்

# கல்யாணமாம் கல்யாணம்

கதையைப் பற்றிக் கேட்கக் கூடாது; பாத்திரங்களைப் பற்றிக் கேட்கக் கூடாது; இப்படியெல்லாம் நடக்குமா என்று கேட்கக் கூடாது; யார் 'வேண்டுமானாலும் வருவார்கள்; யார் வேண்டுமானாலும் போவார்கள்; அவர்கள் விருப்பம். இதை ஒப்புக் கொண்டு திட சங்கற்பத்துடன் சித்ராலயாவின் ''கல்யாணமாம் கல்யாணம்'' என்ற படத்தைப் பார்த்தால் உங்களையும் மறந்து நீங்கள் சிரிக்கலாம். இல்லாத போனால் கதையாம் கதை, படமாம் படம் என்று முணுமுணுத்துக் கொண்டு வெளியே வரவும் செய்யலாம்!

ஜெய்சங்கர் தாம் ஏற்ற சவாலை அருமையாகச் சமாளித்திருக்கிறார். 'ஜேம்ஸ் பாண்ட்' பாணி என்ன, அசல் பட்டிக்காட்டு முத்துவின் பாத்திரத்தையும் பிரமாதமாக எடுத்துக் காட்ட முடியும் என்பதைப் படம் முழுதும் நிரூபித்திருக்கிறார். ஜெயசித்ரா ஆசையோடு நெருங்கும்போதெல்லாம் அசட்டு விழி விழித்துக் கொண்டு விலகி ஓடுவது ஒன்று போதும் பார்த்து மகிழ, ரசித்து அவரைப் பாராட்ட.

ஜெயசித்ராவுக்கு இரட்டை வேடம் என்றால், ஒன்று துடுக்கு, இன்னொன்று பதவிசு என்று திரைக்கதை நியதிப்படி தீர்மானித்துக் கொள்ளலாம். இரட்டை வேடங்களிலும் சக்கைப் போடு போட்டிருக்கிறார்!

படம் முழுவதும் நகைச்சுவை பிரதான அங்கம் வகிப்பதோடு விசேஷ நகைச்சுவை நடிகர்களும் இருக்கிறார்கள். கே. ஏ. தங்கவேலு தம் பங்கை மிகச் சிறப்பாகவும் சிரிப்பாகவும் செய்திருக்கிறார். அநுபவம் மிக்க அவரது நடிப்பு தித்திக்கும் கனியாக நமக்குக் கிடைக்கிறது. 'சோ'வுக்கு இந்தப் படத்தில் அதிகப் பங்கு. அருமையாக நடித்துப் பல இடங்களில் ரசிகர்களின் கைதட்டலைப் பெறுகிறார். இவர்களுடன் தேங்காய் சீனிவாசனும் சேர்ந்து கொண்டு நகைச்சுவைக்கு மேலும் சுவை கூட்டியிருக்கிறார். அழுத்தமான பாத்திரங்களை ஏற்றுப் பல படங்களில் நடித்துத் தமக்கெனத் தனிப் பெயர் தேடிக் கொண்டிருக்கும் வி.எஸ். ராகவன்கூட இப்படத்தில் ஹாஸ்யப் பாத்திரமாகவே நடித்திருக்கிறார்!

பல தமிழ்ப் படங்களில் வந்த பல பாடல்களும் துளித் துளி இடம் பெற்றுக் கைதட்டலையும், நகைப்பொலியையும் பெறுகின்றன. இவற்றுடன் புதுப் பாடல்கள் சேரும்போது தான் ஒரே அறுவை!

கதை, வசனம் பஞ்சு அருணாசலத்தின் பொறுப்பு. வசனம் சிறப்பாயிருக்கிறது. கதை என்று தனியாக எதையுமே வைத்துக் கொள்ளாததால் நாமும் தனியாக எதையுமே சொல்ல முடியவில்லை.

''பட்டிக்காடா, பட்டணமா?'' என்ற படம் பார்க்காதவர்கள் இந்தப் படத்தை ரசிப்பார்கள்!

— **காந்தன்**



# விஷம்

பொன்னித்துறைவன்

அரை மணிக்கு ஒரு தரம் யமனுடன் மல்லுக்கு நிற்பது அவருக்கு ஆறு வருஷங்களாகப் பழகிப் போன விஷயம். அறுபத்தெட்டை நெருங்கிவிட்ட இவ்வேளையில் மரணத்தைக் கண்டு பயப்பட அவசியமில்லை தான். ஆனால், கர்ம பலன், மூர்த்தண்யமான இருமல் ரூபத்தில் நெஞ்சுக் குழிக்குள் சுவாசப் பைக்கும் நெருடலான முடிச்சுத் தொடராய் உலுக்கி இழுக்கும்போதெல்லாம் அவர் உள்ளம் சாவின் சந்நிதானத்தில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து புரண்டு மடிப் பிச்சை கேட்கும்.

முதுமைக்கு அதிகம் புரண்டு கொடுக்காமல் வைரம் பாய்ந்து தளராதிருந்த அந்தத் தேகத்துக்குள்ளும் இப்படியோர் அவஸ்தையை அடைத்து வைத்து வேடிக்கை பார்த்தது காலம்.

மாணவன், பிள்ளை, கணவன், தகப்பன், தாத்தா ஆகிய ஸ்தானங்களுக்குரிய பொறுப்புக்களையெல்லாம் அந்தந்த வயதில் இருந்த அறிவுக்கெட்டிய வரை தக்கபடி நிறைவேற்றி, இப்பொழுது கொள்ளுத் தாத்தாவாகக்கூட ஆகிவிட்ட அவருக்கு உலகப் பிடிப்புக்களெல்லாம் பெருமளவுக்குத் தளர்ந்துவிட்டபடியால், சாகாமல் எப்படியேனும் ஜீவித நிலையில் இருக்கத்தான் வேண்டும் என்ற நிர்ப்பந்தங்கள் இல்லை. ஆயினும், 'உறங்கினேம், விழிப்பு வந்துவிட்டது, எழுந்து இடத்தைக் காலி செய்தோம்' என்றிராமல், விழித்த பின்னும் சோம்பேறித்தனமாக, எழுந்திருக்க மனமில்லாது கடந்த நாட்களுடைய 'வாசனை'களின் கதகதப்பில் ஒண்டிக் கொள்வது அவருக்கு இதமாக இருந்தது.

ஆனால் —

'கொல்'லென்ற சதங்கை ஒலியுடன் கயிற்றில் கல்லைக் கட்டி நீருக்குள் இறக்குவதைப் போல், உக்கிரமான இருமலைச் சுமந்து கொண்டு முடிவே இல்லாமல் அமிழ்ந்து கொண்டே போவது உயிரா, உடலா ?

வியர்க்கிறது. உடலின் வெலவெலப்பை உணரும் அளவுக்குச் சுரணை வந்துவிட்டது. கண்ணாமூச்சி விளையாடும் உயிரின் தலைப்பு விரல்களுக்கிடையில் சிக்குகிற — அதுவாகவே போனால் போகிறதென்று விட்டுக் கொடுத்துச் சிக்குகிற — இதமான பிரக்ஞைக்கு உலகத்தையே முதன் முதலாகப் பார்ப்பது போன்ற பிரமிப்புத் தட்டுகிறது. மேற்கே, பெருமாள் கோவிலின் பாசி படர்ந்த கோபுரப் பச்சையில் மோதிச் சிதறும் காலைச் சூரியனின் செந்நிறக் கிரணங்களை அவரது குளங் கட்டிய விழிகள் வெறிக்கையில் — அது அழுகையா, ஆனந்த பாஷ்பமா ?

மரணத்தின் பதச்சோறாக, 'இதோ, இதுதான் ! இப்படித்தான் இருக்கும்' என்று தினம் விரட்டுகிற இந்த இருமலின் பூர்வோத்திரத்தை, ஒட்டியிருந்த நினைவுத் துளிகளின் குப்பலில் தேடுங்கால் ஒரு காட்சி விரிகிறது.

ஐம்பத்தைந்து வருடங்களுக்கு முன்னால் கபிஸ்தலத்துச் சத்திரத்தில் ஒரு பதின்மூன்று வயதுப் பையன் — ஒல்லி, பெரிய தலை, குடுமி, கொத்தவரங்காய்ப் பின்னல் — இதே போல் இருமிக் கொண்டு தனியாய்த் தவிக்கிறான். ஆனால், அத்தனை தவிப்பிலும், மறுநாள் பள்ளியில் மனனம் செய்து ஒப்பிக்க வேண்டிய ஆங்கிலக் கவிதையொன்றை, புகை கப்பிய அரிக்கேன் விளக்கொளியில், தட்டுத் தடுமாறி உரக்கப் படிக்கிறான். மிக வறிய குடும்பத்தைச் சேர்ந்த அவனது பெற்றோர்களால் அவனை சம்ரட்சணை செய்ய இயலாமல், யாரோ ஒரு புண்ணியவான் கை காட்டிவிட்டதின் பேரில் அந்தச் சத்திரத்துக்கு அனுப்பி வைத்து, அதே புண்ணியவானின் ஆச்ரயிப்பில் கும்பகோணத்துப் பள்ளியொன்றில் இலவசப் படிப்பும் ஏற்பாடாகியிருந்தது. தினமும் மேலும் கீழுமாக இருபது மைல்கள் நடக்க வேண்டும். காலையில் பழையதைச் சாப்பிட்டுவிட்டு, கையிலும் கட்டிக் கொண்டு 'வெருவெகெ'ன்று காவிரி போகிற போக்கில் நடந்து கொண்டேயிருந்தால், கால்கள் பின்னுகிற கட்டத்திலிருந்து ஒரு மணி கழித்துப் பள்ளியின் தரிசனம் கிடைக்கும். பிறகு பாடங்கள்; வலுக் கட்டாயமாக, தரமான கல்வியைப் புகட்டியே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டு, சில கொள்கைகளுக்காகத் தங்களை அர்ப்பணித்துக்கொண்ட ஆசிரியர்கள் ; உபதேசம் செய்வதற்குரிய யோக்கியதையும், தொழிலுக்கும் கற்பு உண்டு என்பதை எடுத்துக் காட்டுகிற, முன் மாதிரியாய் எடுத்துக் கொள்ளத்தக்க அவர்களது ஒழுக்கம். இப்படியொரு சூழ்நிலையில் காலை பத்திலிருந்து மாலை நான்கு வரையில் கழித்து விட்டு மீண்டும் அந்தச் சிறுவன் கபிஸ்தலம் செல்ல வேண்டும், நடந்து, தினமும்.

முன் பனிக் காலம். அவன் ஓயாது இருமிக் கொண் டிருந் தான். இடப் பிலே நாலு முழும்



உடலிலே போர்த்தப்பட்ட ஈரிழைத் துண்டுமாக அவன் குத்திட்டு உட்கார்ந்து கைகளை முழங்கால்களுக்கிடையில் இடுக்கிக்கொண்டு முடிந்த வரையில் தன்னைக் கதகதப்பாக்கி இருமிக் கொண்டே படித்துக் கொண்டிருந்தான்.

சத்திரத்துக்கு வெளியே ஒரே கும்மிருட்டு. காப்பாளன் உள்ளே அடக்கமான ஓர் இடத்தில் தூங்கிக் கொண்டிருந்தான்.

சிறுவன் சட்டென்று புஸ்தகத்தை மூடி வைத்துவிட்டு, விளக்கைப் பெரிது செய்தான். வெளியே கும்மிருட்டை வெறித்தான். ஏதோ அரவம் கேட்ட பிரமை. பிறகு மீண்டும் இரும ஆரம்பித்துவிட்டான்.

இருமி இருமி அவனது விழிகள் நிலைகுத்தி இருட்டை நோக்குகையில் அக்கருமையிலிருந்து ஓர் உருவம் — கோவணாண்டியாக ஜடாமுடியுடன் உடலெல்லாம் விபூதிப் பூச்சுமாக — வெளிப்பட்டது.

பயத்தினால் இருமல் போக்கென்று அடங்கியது. மலங்க மலங்க விழித்தான் சிறுவன். சத்திரத்துத் திண்ணையில் வந்து உட்கார்ந்தார் அந்த ஜடாமுடி.

அருகில் அவரது கண்களைச் சந்திக்கையில் சிறுவனுக்குச் சற்றுப் பயம் விலகியது. கருணை ததும்பும் விழிகள். வயதும் அதிகமில்லை.

"தம்பி! எத்தினி நாளா இப்படி இருமறே?"

பதில் சொல்ல முதலில் நாவெழவில்லை. சிறிது தயங்கியபின், "கொஞ்ச நாட்களாகத்தான்" என்றான்.

பையனை அருகில் வருமாறு சமிக்ஞை செய்தார் சாமியார். நெஞ்சு படபடக்க அவரிடம் நகர்ந்தான் சிறுவன். தோள்களைப் பிடித்து அணைத்துக் கொண்டு அவனது உச்சந்தலையில் தமது உள்ளங்கையை வைத்துப் பார்த்தார். கைநாடியைக் கணித்தார். கீழ் இமைகளைக் கட்டை விரலால் இழுத்து விழிகளைப் பார்த்தார். பிறகு முதுகில் ஒரு 'ஷொட்டு'க் கொடுத்து, "பயப்படாதே! சரி பண்ணிடலாம். நீ போய்க் கெணத்தடியிலே கைகாலைச் சுத்தம் செஞ்சிக்கிட்டு வா. நான் ஒரு நிமிடத்திலே வந்துடறேன்" என்று கூறி அவனது பதிலை எதிர்பாராமல் இருட்டில் மறைந்து விட்டார்.

பையன் திக்பிரமை பிடித்தாற்போல் சிறிது நேரம் அமர்ந்திருந்தான். பிறகு கிணற்றடிக்குச் சென்று கைகால்களைக் கழுவிக் கொண்டு திண்ணைக்குத் திரும்பியபோது சாமியார் ஏற்கனவே அங்கு உட்கார்ந்திருந்தார். அவரது மடியில் பச்சிலைக் கொத்து ஒன்று கிடந்தது. பையனுக்குத் திருநீறு அணிவித்து நாவிலும் ஒரு சிட்டிகை தூவினார். பிறகு கிழக்கே பார்த்து உட்காரச் சொல்லி வாயைத் திறக்கச் செய்தார். அவர் எழுந்து



நின்று பச்சிலையை உள்ளங் கைகளுக்கு இடையில் வைத்துக் கசக்கிக் கொண்டே யிருந்தார். சொட்டுச் சொட்டாக ரஸம் இறங்கி அவன் நாவில் விழுந்தது. எட்டிக் காயாகக் கசந்தது. முகம் கோணிற்று. ஒரு கர்ஜனை. கோணல் நேராயிற்று. இரண்டு மூன்று நிமிடங்களுக்கு ரஸம் தொண்டைக்குள் இறங்கிக் கொண்டேயிருந்தது. பையன் வைத்த விழி வாங்காமல் சாமியாரின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு, ''அவ்வளவுதான்'' என்று கூறிச் சக்கையை விசிறிவிட்டு அவனை விடுவித்தார். அவனுக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. நாய்க் குட்டியைப் போல் உடலைச் சிலிர்த்துக் கொண்டான்.

''தம்பி! படிச்சது போதும். போய்க் கண்ணை மூடிக்கிட்டுப் படுத்துக்க... தெரியுதா?''

ஆகட்டுமென்று தலையாட்டினான் பையன். எல்லாமே அவனுக்குப் பிரமிப்பா யிருந்தது.

''உன் பேரு என்ன தம்பி?''

''ராமசாமி.''

''பேஷ்... நீ நல்லா இருப்பே...கவனமாப் படி... வரட்டுமா?''

பதிலுக்குக் காத்திராமல் சாமியார் இருட்டில் கரைந்து விட்டார்.

அதிலிருந்து ராமசாமிக்குச் சாமியாரும் இருமலும் போன இடமே தெரியாது.

''நீ நல்லா இருப்பே'' என்று சாமியார் சொன்னது பொய்க்கவில்லை. ராமசாமி தன் படிப்பின் வலிமையினால் படிப்படியாக உயர்ந்து அரசாங்கத்தில் பெரிய உத்தியோகங்களெல்லாம் வகித்து, ரிடையராகி, செல்வத்தில் கொழித்துக் கொண்டிருக்கிறான்; ஆனால் சாமியார் வந்து போய்ச் சரியாக ஐம்பது வருஷங்களுக்குப் பிறகு மீண்டும் அந்த இருமல் வந்து விட்டது, ஒரே ஒரு வித்தியாசத்துடன்.

பதின்மூன்று வயதில் நடந்து வந்த இருமல் இப்பொழுது மரண பயம் என்ற வாகனமேறி வந்திருக்கிறது.

இருமலின் இரண்டாம் படையெடுப்புக்கு முதல் நாள் ராமசாமி, கவியரசரின் கீதாஞ்சலியை வைத்துக் கொண்டு சில வரிகளை வெறித்தபடியே இருந்தார்.

மரணம் என்ற நின் சேவகன்
உனது அழைப்பை ஏந்தி
எனது வாசலில் நிற்கிறான்.
இரவு கறுப்பா யிருக்கிறது.
உள்ளம் பயப்படுகிறது.
ஆயினும் நான் விளக்கேந்திச் சென்று
கதவம் திறந்து வணங்கி வரவேற்கிறேன்.
ஏனென்றால்
என் வாசலில் நிற்பவன்
உனது தூதுவன்.
அவன் உனது கட்டளையை முடித்து
ஏகிவிடுவான்,
தொடரும் என் காலையில்
கரி நிழலை நீளவிட்டு !

மரணமே!
வாழ்க்கையின் கடைசி நிறைவே!
வா.
என்னிடம் கிசுகிசு.
ஒவ்வொரு நாளும் நீ வருவாய் என்று
நான் எதிர்பார்த்து நிற்கிறேன்.
வாழ்க்கையின் இன்பங்களையும்
துயரத்தையும் தாங்கி வந்திருக்கிறேன்,
உனக்காக.
இதோ, மலர்கள் தொடுக்கப்பட்டுவிட்டன.
மணமகனுக்கு மாலை தயாராகி விட்டது.
கடிமணம் முடிந்தவுடன்
மணப்பெண் தனது வீட்டை விட்டேகி
இரவின் ஏகாந்தத்தில்
தனது நாயகனைத்
தனிமையில் சந்திப்பாள்.

இந்த வரிகளைப் படித்தபோது ராமசாமிக்கு உடலும் மனமும் கனமற்று இலேசாய் மிதந்தது. நயமான எழுத்துக்கு வயப்படும் உபயோகமற்ற விருத்திக்குத் தன்னை இதற்கு முன் அவர் உட்படுத்திக் கொண்டதில்லை. ஆனால் அன்று ஏனோ அவர் உள்ளம் அப்படிப் பறந்தது. அவலமான அந்தக் ''கடைசி நிறைவை'' மங்கலம் சொட்டச் சொட்டத் திருமணக் கோலமாக்கிவிட்ட வரிகளில் மின்னுவது கவிஞனின் அறிவுபூர்வமான சமத்காரமா அல்லது பூரணப் பரிணாமம் எய்திய நிலையில் உணர்ந்த ஆத்மானுபவமா? இதைப் பற்றி விசாரணை செய்யச் செய்ய, உண்மையான கவிஞனின் அகராதியில் அமங்கலம் என்ற வார்த்தையே இருக்க முடியாது என்ற முடிவுக்கு வந்தார் ராமசாமி. அப்படி அவர் முடிவு செய்த மறுநாள்தான் பழைய பரிசயமான அந்த இருமல் வாகனத்தில் வந்து மீண்டும் கவ்விக் கொண்டது.

முதலில் சில நாட்களுக்கு அவர் அதை அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. ஆனால், போகப் போக நிலைமை கவலைக்குரியதாயிற்று. விசேஷமான வைத்தியத்துக் கெல்லாம் மசியாததோடு, நாளுக்கு நாள் இருமலின் மூர்த்தண்யம் அதிகமாக ஆரம்பித்தது. மரணம் காதருகில் கிசுகிசுப்பதை வாழ்க்கையில் முதன் முறையாக அவர் உணர ஆரம்பித்தார். சாமியாரின் ஞாபகம் வந்தது. அவர் எங்கு இருப்பார்? இருப்பாரோ? இருந்தால் எவ்வளவு வயது ஆகியிருக்கும்? நூறைத் தாண்டி யிருக்காது? அவரை எப்படித் தேடுவது? அன்று கபிஸ்தலத்தில் போகக்கென்று தெய்வாதீனமாய் இருட்டைத் துளைத்துக் கொண்டு குதித்த மாதிரி இன்றும் வரக் கூடாதோ?

கபிஸ்தலத்திலிருந்து ஒரு மைல் தொலைவிலிருந்த சொந்த ஊரான பாபநாசத்தில், தான் சொந்தமாகக் கட்டிய வீட்டின் மொட்டை மாடியில் உட்கார்ந்து கொண்டு இப்படி என்னவெல்லாமோ யோசனை செய்து கொண்டிருந்த ராமசாமிக்குச் சிரிப்பு வந்தது.

இந்த இருமல் இரண்டாவது முறை வந்திருக்கா விட்டால், முதல் முறை வந்ததைப் பற்றியோ, அது தெய்வாதீனமாய்க் குணப்படுத்தப்பட்டதைப் பற்றியோ ஞாபகம் இருந்திருக்க நியாயமில்லை என்று நினைத்தபோது தான் ராமசாமிக்குச் சிரிப்பு வந்தது.

அந்தச் சாமியார் இன்னமும் உயிருடன் இருப்பதே அசாத்தியமான விஷயம் என்று



திவான் பகதூர் ஆர். வரதாச்சாரி
மறைவு : 30-12-1973

திவான் பகதூர் ஆர். வரதாச்சாரி 1890ம் வருஷம் ஏப்ரல் மாதம் பிறந்தார். பட்டப் படிப்பை முடித்துச் சென்னை சர்க்கார் ரெவின்யூ இலாகாவில் 1910ல் பணிபுரிந்தார். பின் அபின்குத்தி இலாகாவுக்கு மாற்றப்பட்டார். ரெவின்யூ விசேஷ இலாகாவில் (யுத்தம் சம்பந்தப்பட்ட விஷயங்களைக் கவனிக்கத் தொடங்கப்பட்ட இலாகா) வேலை செய்து, தொழில் துறை டைரக்டர் இலாகாவிலும் வருமான வரி இலாகாவிலும் பணியாற்றினார்.

வருமான வரி இலாகாவில் வருமான வரி அதிகாரியாகவும் உதவி கமிஷனராகவும் பல பதவிகளை வகித்தார். 1941 ஏப்ரலில் பழைய பஞ்சாப், வடமேற்கு எல்லை, டில்லி மாகாணங்களுக்கு வருமான வரி கமிஷனராக நியமிக்கப்பட்டார்.

1943 ஜூலையில் பம்பாய்க்கும் பழைய சிந்து மாகாணத்துக்கும் வருமான வரி கமிஷனராக நியமிக்கப்பட்டு பம்பாய்க்கு மாற்றப்பட்டார். அக்டோபர் 1947ல் ஓய்வு பெற்றார்.

இவரது இணையற்ற, திறமை மிக்க சேவைக்காக 1941ல் 'ராவ் பகதூர்' பட்டமும் 1945ல் திவான் பகதூர் பட்டமும் வழங்கப்பட்டது. வேறு எந்த வருமான வரி கமிஷனருக்கும் திவான் பகதூர் பட்டம் வழங்கப்படவில்லை.

1951 ஜூலை மாதத்தில் இந்திய சர்க்கார் எம்பயர் ஆப் இந்தியா லைப் இன்ஷூரன்ஸ், ஜூபிடர் ஜெனரல் இன்ஷூரன்ஸ் கம்பெனிகளுக்கு நிர்வாக அதிகாரியாக நியமிக்கப்பட்டார். இவ்விரு கம்பெனிகளையும் நிலையான நிதியில் நிறுத்திய பெருமை இவருக்கு உண்டு. இவரது வேண்டுகோளின்மீது 1956 மார்ச்சில் இந்தப் பணியிலிருந்து விடுவிக்கப்பட்டார்.

1956ல் லைப் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷன் தொடங்கியபோது இந்திய சர்க்காரால் இவர் ஒரு டைரக்டராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார். வேலைகள் தேர்ந்தெடுப்புக்கும், உயர் பதவி அளித்தலுக்கும், இன்ஷூரன்ஸ், வருமான வரி இலாகா போன்ற பல கமிட்டிகளில் அங்கத்தினராகச் சேவை செய்திருக்கிறார்.

1960 ஆகஸ்டில் "மோகல் லைன்" சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்பட்டபோது இந்தக் கம்பெனியின் டைரக்டராகவும் நியமிக்கப்பட்டார்.

1968ல் மேற்குறிப்பிட்ட கம்பெனிகளிலிருந்து தம் உடல்நலக் குறைவினால் ராஜினாமா செய்துவிட்டார். இவரது மறைவினால் வருந்தும் குடும்பத்தினருக்கு அனுதாபங்கள்.

## நினைவாஞ்சலி!



**திரு தா. தாமோதர முதலியார்**
**திருப்பத்தூர்** (வ. ஆ. மா.)

தோற்றம் : 14-10-1901 மறைவு : 27-12-1973

அன்பாலும், பண்பாலும் எங்கள் இதயத்தில் நீங்கா இடம் பெற்ற திரு தா. தாமோதர முதலியார் அவர்களின் ஆன்மா சாந்தியடைய எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறோம்.

அன்னாரது பிரிவால் ஆற்றொணாத் துயர்கொண்ட,
**ஆண்டாள் அம்மாள்**
மற்றும் உறவினர்கள்

புரிகிற அதே வேளையில் அவரை எங்காவது சந்தித்து விடமாட்டோமா என்ற நப்பாசையினால் உந்தப்பட்டுக் கபிஸ்தலத்துக்கு மிக அருகிலேயே டேரா போட்டு, கண்ணில் படுகிற இருட்டை யெல்லாம் வெறித்து வெறித்துத் துழாவுகிற தமது கடுமையான அஞ்ஞானத்தை எண்ணி அவருக்குச் சிரிப்பு.

வெளிச்சத்தைத் தேடுகிற வயதில் இருட்டைத் தேடிக் கொண்டிருக்கிற விவஸ்தை கெட்ட தமது புத்தியை நினைத்துச் சிரித்தார்.

ஆயினும், இந்தச் சிரிப்பை யெல்லாம் அர்த்தமற்றதாக்குகிற வகையில், ஓர் அமாவாசை அந்தகாரத்தில், குடமுருட்டிப் படித் துறையில் காலம் தாழ்ந்து தொடங்கிய சந்தியாவந்தனத்துக் காயத்ரீ ஜபக் கட்டத்தில், மூடிய இமைகளுக்குள்ளே பறந்த ஜோதிப் பூச்சிகளை எண்ணிக் கொண்டிருக்கையில், உச்சந்தலையில் யாரோ கை வைத்தமாதிரி விருந்தது ராமசாமிக்கு. ஸ்பரிசத்திலிருந்தே யார் என்று புரிந்து விட்டது. உடல் முதலில் வியர்த்து அதே கருக்கில் சில்லிட்டது. கண்ணைத் திறக்க முயன்றார். முடியவில்லை. 'ஓ' வென்று கதறிக் காலில் விழ வேண்டுமென்று துடித்தார். ஆனால் உடலின் எந்தப் பாகத்தையும் அசைக்க முடியவில்லை. அவர் கேட்கத் துடித்துக் கொண்டிருந்த கேள்விகள் நெஞ்சிலேயே உறைந்து விட்ட நிலையில், தெய்வத் தருணம் மலர்ந்தது. கேட்கப் படாத கேள்விகளுக்கு ரத்தினச் சுருக்கமாகப் பதில் வந்தது. கணீரென்ற குரலில்:

''என்னைத் தேடித் தேடி நீ களைத்துவிட்டாய். இனியும் உன்னைச் சோதிக்க எனக்கு மனமில்லை. தேடி அலைய வேண்டிய வயசுதான். ஆனால் எதைத் தேட வேண்டுமென்கிற நியாயம் ஒன்று இருக்கிறதே! உண்மையில் நீ என்னைத் தேடுவதைத் தவிர்த்து உன்னையே தேடியிருக்க வேண்டும். ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும் தன்னைத் தானே தேடுகிற கட்டம் வந்தால்தான் மனிதன் என்கிற ஸ்தானத்துக்கு அவன் அருகதையாகிறான். தம்பி! இன்று இருமல்தான் உன் வியாதி என நினைத்துக் கொண்டிருக்கிறாய். அதுதானில்லை. உண்மையில் அது ஒரு வியாஜம்தான். நிஜமான வியாதி எது தெரியுமா? உனது வயதும் அதன் உடன் பிறப்பான மரண பயமும்தான். ஐம்பது வருஷங்களுக்கு முன் ஏறுமுகத்திலிருந்த உனது இளமையின் பலத்தினால் நான் கொடுத்த மகா கொடிய விஷத்தைத் தாங்கிக்கொள்ள முடிந்தது. இருமலும் சொஸ்தமாயிற்று. விஷம் மருந்தாக வேலை செய்வதற்கு உகந்த களமாக இருந்த அந்த இளமையைக் கொத்திக் கொண்டு போன காலக் காக்காய்தான் மூப்பையும் அதற்குத் துணையாக இருமலையும் கொண்டு வந்து சேர்த்திருக்கிறது! இந்நிலையில் என்னைத் தேடி என்ன பிரயோசனம்? ஆனால் உண்மையில் நீ என்னையா தேடுகிறாய்? இல்லை. நீ தேடுவது அந்தப் பச்சிலையை. அதாவது மகா கொடிய ஒரு விஷத்தை. ஆனால் விஷம் மருந்தாக வேலை செய்கிற காலம் எப்பொழுதோ கடந்து விட்டதே! விஷத்தைப் புரிந்து கொண்டு தெளிந்திருக்க வேண்டிய கட்டத்தில் விஷத்தைத் தேடி அலைந்தது விபர்த்தமான காரியமில்லையா? சிரிப்பு வருகிறதா? சிரி. அதுதான் நல்லது. நம்மையே நாம் பார்த்துச் சிரிக்கக் கற்றுக் கொண்டு விட்டால் வேறு மருந்தே வேண்டாம் ராமசாமி! நான் வரட்டுமா?''

சீரான தெய்வ இசையாய் ஒலித்துக் கொண்டிருந்த அம்மகானின் குரல் நின்றவுடன் ராமசாமியின் ஜபம் தடைப்பட்டது. விழிகளிலிருந்து ஊற்றெடுத்த கண்ணீர் குடமுருட்டிப் பிரவாகத்தோடு சங்கமித்தது. ஞானஸ்நானம் செய்விக்கப்பட்ட புனிதனாய் அவர் மௌனமாய் வீடு திரும்பிக் கவியரசரின் அமர வாக்கியங்களில் தம்மை இழந்தார்:

என்னை முடிவில்லாமல் செய்திருப்பது
நினது இச்சை.
இந்தப் பூஞ்சைப் பாத்திரத்தை
நீ மீண்டும் மீண்டும் காலி செய்கிறாய்;
மறுபடியும் புத்தம் புதிய உயிரால்
நிரப்புகிறாய்.
உனது முடிவில்லாப் பரிசுகளெல்லாம்
எனது இந்தச் சின்னஞ் சிறு
கைகளுக்குள்தான் வருகின்றன.
யுகங்கள் கழிகின்றன.
இருந்தும் நீ பொழிந்துகொண்டே யிருக்கிறாய்
அப்படியும் என் கைகளில்,
நிறைய இடமிருக்கிறது.....



## திருப்பணி வேண்டுகோள்

காவிரித் தென்கரை 38-வது தலமும், கவிச் சக்கரவர்த்தி கம்பன் பிறந்த தலமுமான தேரழுந்தூரில் உறையும் ஸ்ரீ வேதபுரீசுவரர் ஆலயத் திருப்பணி நன்முறையிலும், விரைவாகவும் சுமார் ஒரு லக்ஷ ரூபாய் மதிப்பீட்டில் செய்யப்பட்டு வருகிறது. ஏப்ரல் மாதத்தில் ஆலய கும்பாபிஷேகம் நடத்தவும் நிர்மானிக்கப்பட்டுள்ளது.

பக்தர்கள் குறையை விரைந்து நீக்கும் ஸ்ரீ சௌந்தரநாயகி அம்மையின் உறைவிடமும், மூன்றாம் குலோத்துங்கன், திரிபுவன வீரத் தேவர், குலோத்துங்க சோழத் தேவர், ராஜகேசரி வர்மர், வீரகேசரி வர்மர் போன்ற சோழ அரசர்களால் வழுத்தி வரப்பட்டதும், தேவாரப் பாடல் பெற்றதுமான இவ்வாலயத்தின் திருப்பணிக்கு அன்பர்கள் யாவரும் நன்கொடைகள் மூலமாகவும், கும்பாபிஷேக மலரில் விளம்பரம் கொடுப்பதின் மூலமாகவும் நிதி உதவி அளிக்கக்கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

முகவரி: செயலர், திருப்பணி கமிட்டி, ஸ்ரீ வேதபுரீஸ்வரர் ஆலயம், தேரழுந்தூர், மாயூரம் வட்டம், தஞ்சை மாவட்டம்.

## ஆரோக்கியம் அழைக்கிறது

# உடலின் துப்புரவுப் பணியாளர்

சின்னக் குழந்தையின் மூடிய கைகளைப் போன்ற வடிவம். கருஞ் சிவப்பு வண்ணம். உள் முதுகில் இடமும் வலமுமாக இப்படி அமைந்திருக்கும் ஒரு ஜதை உறுப்புக்கள் மனித உடலை ஓயாமல் துப்புரவாகப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பை ஏற்கின்றன. இவையே சிறுநீரகங்கள்.

• இதய ரத்தத்தின் ஒவ்வொரு சொட்டும் சுத்தமாக்கப்படும் ஆலைகள் இவை. இது இரவும் பகலும் ஓயாது நிகழும் பணி. ஒவ்வொரு நிமிஷமும் சுமார் ஒரு லிட்டர் ரத்தம் இங்கே சுத்தமாகிறது. அந்த இரத்தம் மீண்டும் இதயத்துக்குப் போய், அங்கிருந்து பல அலுவல்களைக் கவனிக்க அனுப்பப்பட்டு, அதனால் அழுக்கடைந்து, மீண்டும் சுத்தமாவதற்குச் சிறுநீரகத்தையே மறுபடியும் மறுபடியும் தஞ்சமடைகிறது.

நாலைந்து அங்குல உயரமும் அதில் பாதி அகலமும் அதைவிடக் குறுகிய தடிமனும் கொண்டு, பெரிய மொச்சை விதையைப் போல் வளைந்திருக்கும் இந்த உறுப்பின் வெளிப்புறம் உறுதியாக இருக்கும். உள்ளேயோ கோபுரம் கோபுரமாகத் திகழ் குவியல்கள் சுமார் பதினைந்து உள்ளன. இவை நெப்ரான் என்னும் நுண் இழைகளால் ஆனவை. ஒவ்வொரு சிறுநீரகத்திலும் சுமார் பத்து லட்சம் நெப்ரான்கள் பின்னிப் பின்னிக் குவிந்திருக்கின்றன.

சிறுநீரகத்துக்குள் வரும் ரத்த நுண் இழைகள் எல்லாம் அற்புதமாக இங்கே வடிகட்டப்படுகின்றன. உப்பு, சர்க்கரை, வேண்டாத நீர் எல்லாம் ரத்தத்திலிருந்து பிரிந்து வரும். இவை நீங்கிச் சுத்தமடைந்த ரத்தம் தன் பணிகளைத் தொடர விரையும்.

ரத்தத்திலிருந்து உடலுக்குப் பயனற்ற உப்புக்களையும் யூரியா எனப்படும் கழிவுப் பொருள்களையும் அகற்றும் போது இவற்றைச் சுலபமாக வெளியேற்ற ரத்தத்திலுள்ள நீரையும் சேர்த்தே சிறுநீரகங்கள் அகற்றுகின்றன. ஆனால் பிறகு, சிறுநீரகத்தின் சில தானங்கள் துணை செய்யக் கச்சிதமாகப் பெரும் அளவு நீரைத் திரும்ப ரத்தம் உறிஞ்சிக் கொண்டுவிடுகிறது.

இரண்டு சிறுநீரகங்களிலிருந்தும் ஓயாமல் சொட்டுச் சொட்டாக வெளியேறும் கழிவு நீர், சிறு நீர்ப் பைக்கே இறங்கி வந்து தேங்கும். குழந்தைப் பருவத்தில் அவ்வப்போது வெகு இயல்பாக உடலைவிட்டுப் பிரிந்துவிடும்; வயது வந்ததும் இடமும் நேரமும் சேரும் வரை காத்திருந்து பிரியப் பழக்கமாகிறது. ஆனால் வெகுநேரம் அடக்கி வைப்பது நல்லதல்ல. இரசாயன உப்புக்கள் சேர்ந்ததால் ஒரு காடியும் அழுக்கும் நிறைந்த இந்த நீர் பிரிந்ததும் அவ்விடத்தை உடனுக்குடன் சுத்தமாக்கி வைத்துக் கொள்வது ஓர் ஆரோக்கியமான பழக்கம். முக்கியமாகச் சருமத்துக்கு நல்லது.

ஒரு நாளைக்குச் சுமார் ஒன்றரை லிட்டர் சிறுநீர் வெளியேறுவது ஆரோக்கியமான அறிகுறி.

ரத்தத்தின் கழிவுப் பொருள்களைச் சிறுநீர் வடிவத்தில் பிரித்து வெளியேற்றுவது சிறுநீரகத்தின் பல பணிகளுள் ஒன்றுதான். உடலின் நீர் அம்சம் எப்போதும் சரியான அளவில் இருக்கும்படி பார்த்துக் கொள்வது இதுதான். பல உப்புக்கள் ரத்தத்தில் போதிய அளவு இருக்கும் பொறுப்பையும் இதுவே ஏற்கிறது.

ரத்தத்துடன் நேரிலே தொடர்புடைய சிறுநீர், வைத்தியர்களின் நண்பன். இதைச் சோதித்தே நோயாளியின் நிலையை நுட்பமாக உணர முடியும். சிறுநீரின் அளவு அதிகமா? குறைவா ? அதன் நிறம் என்ன? அதில் உள்ள உப்பு, சர்க்கரை, ரத்த அணு, எவ்வளவு? சீழ் இருக்கிறதா என்றெல்லாம் ஆராய்ந்து சிறுநீரகத்தின் நிலையும் உடல் நோயின் நிலையும் பற்றி அறிவார்கள். அதற்கேற்ப மருத்துவம் பார்க்க முடிகிறது.



ராபர்ட் கபரலி (நடுவில் நிற்பவர்) ஏற்கெனவே ஒரு சிறுநீரகம் நீக்கப்பட்டவர்; இப்பொழுது எஞ்சியுள்ள மற்றச் சிறுநீரகமும் பழுதாயிற்று. அதனைப் பழுது பார்த்துச் சீர்படுத்த பாஸ்டன் பல்கலைக் கழக மருத்துவ நிலையம் ஒரு புதுமையான அறுவை மருத்துவம் செய்தது. அவரது சிறுநீரகத்தை வெளியே எடுத்து இந்தக் கருவியில் வைத்துப் பழுது பார்த்துப் பின்பு உடலில் பொருத்தினர். இது எப்படி என்பதைக் கருவி கண்டுபிடித்த டாக்டர் கார்ல் ஆல்ஸன் (வலப்புறம்), அறுவை மருத்துவம் செய்த எட்டு மருத்துவர்களில் ஒருவரான டாக்டர் ராபர்ட் கிரேன் ஆகிய இருவரும் நோயாளிக்குக் காட்டுகின்றனர்.

செலவு குறைந்ததும் பயன் நிறைந்ததுமான இந்தப் பரிசோதனையை நோயாளிகள் மட்டுமன்றி அனைவருமே ஆண்டுக்கொரு முறை செய்து கொண்டு டாக்டரிடம் ஆலோசனை பெறுவது ஓர் ஆரோக்கியப் பழக்கமாகும்.

உடலின் ஆயுட் காலம் முழுவதும் ஒவ்வொரு விநாடியும் அவசியம் பணி ஆற்ற வேண்டியே இந்த உறுப்பு ஒன்றுக்கு இரண்டாக இருக்கிறது. பணி புரியும் நெப்ரான்களோ லட்சக் கணக்கில் உள்ளன.

சொறி சிரங்கு வரும் போது கவனக் குறைவாலோ, விபத்துக் காயங்களினாலோ அதிர்ச்சியாலோ, ரத்த அழுத்த மிகுதியாலோ இந்த உறுப்புக்கள் சீராக இயங்க முடியாமல் போகும். அப்போது அலட்சியமும் அறியாமையும் சேர்ந்தால் நோய் முற்றி உயிருக்கே ஆபத்தாகிவிடும்.

''அக்யூட் நெப்ரைடஸ்'' நோய் இருந்தால் காலையில் முகம் வீங்கியிருக்கும். தலை வலிக்கும். ஒரு நாளைக்கு ஒன்றரை லிட்டர் போக வேண்டிய நீர் அந்த அளவு போகாது.

'இதுதான் நோய் என்று புரிந்து கொள்ளாவிட்டால் சிகிச்சை அளிப்பது எப்படி? ''குழந்தையின் முகம் வீங்கினாற்போலிருக்கிறது. மாரியாத்தா வந்திருக்கிறாள்'' என்ற நினைப்பில் வைத்தியம் செய்யாதிருந்தார் ஒரு தந்தை. ஒரு வாரம் கழித்து, சிறுநீர் பிரியாமலும் ரத்த அழுத்த மிகுதியாலும் குழந்தை தவித்தபோது தான் நோய் சிறுநீரக அழற்சி என்று தெரிந்தது. குணப்படுத்த முடியாத அளவுமுற்றிப்போயிருந்தது.

சிலருக்குச் சிறுநீரக உறுப்பு அதிகம் கெட்டுப் போயிருக்கும். நோய் அடையாளங்களைக் கவனித்துச் சிகிச்சைகளை மேற்கொள்வார்கள். அந்த அடையாளங்கள் மறைந்தவுடன் சிகிச்சையை நிறுத்தி விடுவார்கள். நோய் வேறு, நோய் அடையாளம் வேறு. முகவீக்கம் கால் வீக்கம் போன்ற நோய் அடையாளம் நின்ற பிறகும் உள்

உறுப்பு குணமடையும் வரை சுமார் மூன்று வார காலமாவது தொடர்ந்து சிகிச்சை பெற வேண்டும். ஆகார விஷயத்தில், முக்கியமாக உப்பு சர்க்கரையில், வைத்தியர் வாக்கே வேதவாக்கு.

டாக்டர் வீட்டுக்கு ஏதோ காரியமாக வந்த ஒரு மெக்கானிக்கின் கால் வீங்கியிருந்தது. முகம் சோகை பிடித்திருந்தது. மூச்சு இறைத்தது. சந்தேகப்பட்டு டாக்டர் அந்த இளைஞனின் ரத்த அழுத்தத்தையும் சிறு நீரையும் சோதித்துப் பார்த்தார். மிக முற்றிய நெப்ரைடஸ் நோயாளி என்பது புரிந்தது. தாமே வலுவில் சிகிச்சையும் செய்தார்.

ஆனால் அந்த நோயாளி இளைஞன், நோயின் புறச் சின்னங்கள் மறைந்ததும் சிகிச்சையை நிறுத்திவிட்டான். அதோடு தான் பூரண ஆரோக்கியமாக இருப்பதாக நினைத்து, டாக்டர் கட்டளையை மீறித் திருமணமும் செய்து கொண்டு விட்டான். அவனது அசட்டையும் அறியாமையும் காரணமாக மணமான மறுநாளே நோய் முற்றி, பத்து நாட்களில் தன் மனைவியை அபலையாக்கி விட்டான்!

அடிக்கடி சிறு நீர் பிரிதல் கர்ப்பிணிக்கு இயல்பு. மற்றவருக்கோ அது நோய்ச் சின்னம். சிறுநீர்க்குழாயின் நீளக் குறைவு காரணமாகப் பெண்கள் சிறுநீரகத் தொடர்பான நோய்களால் விரைவில் பாதிக்கப்படுகிறார்கள். தலைவலி, முக வீக்கம், கால்வீக்கம் தவிர, எரிச்சல், குளிர் சுரம் போன்றவை 'பைலிடஸ்' என்னும் தீவிர நோயின் அடையாளங்களாகும்.

சிறு நீரகத்தில் 'கல்' சேர்வதும் அதன் வலு குன்றுவதற்கு ஒரு காரணம். இது சிறுநீரகத் திசுக்கள் பணி புரியவொட்டாமல் தடுக்கும்.

மிகையான இரத்த அழுத்தமும் சர்க்கரை வியாதியும் சிறுநீரகத்தைப் பாதிக்கும்.

ஒரு சிறுநீரகம் முற்றிலும் பழுதாகிவிட்டாலும் மற்றொன்று ஆரோக்கியமாக இருந்தால் போதும். ஒற்றைச் சிறுநீரகத்துடன் கவனமான ஆரோக்கியத்துடன் வாழ்வோர் பலர் உள்ளனர்.

சென்னை அரசினர் மருத்துவ மனையில் உள்ள செயற்கைச் சிறுநீரகம். நோயாளியின் இரத்தம் இதனுள் செலுத்தப்பட்டுத் தூய்மை அடைந்து மீண்டும் உடலுக்குள் புகும்.





## விந்தையான வேட்டை !

சோவியத் நாட்டில் மீனவர்கள் சின் கார்மொ ராண்ட் பறவையை மீன் பிடிப்பதற்குப் பயன்படுத்து கின்றனர். நன்கு பயிற்சியளிக்கப்பட்ட அந்தப் பறவை யின் கழுத்தில் ஓர் ஒடுங்கிய வளையத்தை மாட்டி, அதனைத் தம்மோடு எடுத்துச் செல்கின்றனர். அந்தப் பறவையை நீளமான கயிற்றில் கட்டி, அதனைத் தண்ணீருக்குள் பாயுமாறு செய்கின்றனர். இந்தப் பறவையைக் கண்டதும் மீன்கள் எவ்வளவு வேக மாகப் பாய்ந்து சென்றாலும், இந்தப் பறவை மீனை நிச்சயம் பிடித்து விடும். மீனைப் பிடித்த பின்னர் அந் தப் பறவை (கட்டிப் போடப்பட்டிருப்பதால்) தப்பித்து ஓடவும் முடியாது; கழுத்தில் ஒடுங்கிய வளையம் மாட்டி யிருப்பதால் மீனை விழுங்கவும் முடியாது. எனவே மீன வர்கள் அந்தப் பறவையைத் தண்ணீருக்கு வெளியே கொண்டுவந்து, அதன் வாயிலுள்ள மீனை எடுத்துக் கொள்வர். இவ்வாறு அந்தப் பறவை ஏராளமான மீன்களைப் பிடித்த பின்னர் பறவையின் கழுத்தில் மாட்டியுள்ள வளையத்தைக் கழற்றிவிட்டு, அதற்கு வயிறார உணவை மீனும் கொடுக்கிறார்கள்.

இதேபோல் 'கருமீன் - உறிஞ்சி' எனப்படும் ரெமோரா என்ற கடல் மீனின் உதவியால் அவர்கள் நண்டு, மீன், நீர் ஆமை முதலியவற்றையும் பிடிக் கின்றனர். இந்த ரெமோரா மீன் எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் செல்லக்கூடியது. மேலும் இதன் தலை மீது ஓர் 'உறிஞ்சும் தட்டு' இருக்கிறது. இந்தமீனை ஒரு கயிற்றில் கட்டித் தண்ணீருக்குள் அடியாழத் துக்குள் இறக்கி விட்டால், இந்த மீனின் உறிஞ்சும் தட்டில் பட்டு ஒட்டிக் கொள்ளும் நண்டு, மீன், ஆமை முதலியவை தப்பிக்க முடிவதில்லை. ரெமோரா என்ற மீன் இவ்வாறு தன் உறிஞ்சும் தட்டில் ஒட்டிக் கொண்ட பிராணியோடு மேலே வந்து சேரும். இந்தத் தட்டு சுமார் ஆறு கிலோகிராம் எடையுள்ள பிராணிகளைக் கூட விடாது பிடித்துக் கொள்ளும் திறன் படைத்ததாகும்.

சோவியத் நாட்டில் கஜாக்ஸ்தானிலும் மத்திய ஆசியாவிலும் உள்ள மக்கள் முயல்களையும் நரிகளை யும் வேட்டையாடப் பொன்னிறக் கழுகுகளைப் பயன் படுத்துகின்றனர். இவர்கள் தாம் வளர்த்து வரும் கழுகுகளின் கண்களை மூடும் வகையில் அவற்றுக்குக் குல்லாய் தைத்துப் போட்டிருப்பார்கள். வேட்டை யாடச் செல்லும்போது அவர்கள் கண்ணில் எங்காவது ஒரு நரியின் வால் தென்பட்டாலும் போதும், உடனே தமது கழுகின் கண்களை மறைத்துக் கொண்டிருக்கும் தொப்பியை அகற்றி விடுவார்கள். மறுகணமே அந்தக் கழுகு வானில் உயரப் பறந்து அந்த நரியைத் தனது கழுகுக் கண்ணால் கண்டுபிடித்து, மின்னல் வேகத்தில் பாய்ந்து அதனைப் பிடித்துக் கொண்டு வந்து விடும்! —சோவியத் விஞ்ஞான செய்தி

''விஞ்ஞான முன்னேற்றமடைந்த இந்த நாளில் என்ன கஷ்டம்? செயற்கைச் சிறுநீரகத்தையோ உறுப்பு மாற்றத்தையோ கொண்டு குணமடையலாம்'' என்று எண் ணுவோருக்கு ஓர் எச்சரிக்கை: இவை எல்லோருக்கும் எட்டாத, ''ராஜ வைத்தியங்கள் !''

செயற்கைச் சிறுநீரகம் உடலுக் குள் பொருத்தும் உறுப்பன்று. உட லுக்குள் சிறுநீரகம் ஆற்ற வேண்டிய பணியை—ரத்தத்தைச் சுத்தமாக்கும் பணியை — உடலுக்கு வெளியே ரத்தத்தை ஓர் இயந்திரக் கருவியுள் செலுத்திச் சுத்தப்படுத்தி மீண்டும் உடலுக்குள் செலுத்தும் சாதனமே செயற்கைச் சிறுநீரகம் என்பது. மிகப் பெரிய நகர ஆசுபத்திரிகளில் இந்த வசதி இருக்கும். ஒரு முறை சிகிச் சைக்குப் பத்துப் பன்னிரண்டு மணி நேரமும் சுமார் ஆயிரத்தைந்நூறு ரூபாயும் பிடிக்கும். இப்படி இரண்டு மூன்று நாட்களுக்கு ஒரு முறை செய்துகொள்ள வேண்டும் ! ஷாக், விபத்துக் காயம் ஆகியவற்றால் சிறு நீரக இயக்கம் தாற்காலிகமாக நின்று விடும் போது இது பொருத்தமான சிகிச்சை. ஆனால் இரண்டு சிறுநீரகங் களும் கெட்டுப் போனவருக்கு இந்தச் செலவு மிக்க வைத்தியம் சொற்ப காலச் சாந்திதான். நோயாளியின் முடிவைச் சில காலம் தள்ளிப் போடவே உதவும்.

ஒருவர் சிறுநீரகத்தை மற்றொரு வருக்குப் பொருத்துவது என்பதும் அவ்வளவு சர்வசாதாரணமான சிகிச் சையன்று. இது பல அம்சங்களைப் பொருத்தது. முதலில் தமது சிறுநீ ரகத்தைத் தானம் செய்யக்கூடிய ஒரு வர் முன்வரவேண்டும். இது யாருக் குப் பொருத்த வேண்டுமோ அவ ருக்கு இணங்க வேண்டும். எடுத்தலும் பொருத்தலுமான ரணசிகிச்சைகளை நிறைவேற்றத் தகுந்த நிபுணர் குழு வும் நவீன வசதிகள் நிறைந்த ரண சிகிச்சை அறைகளும் இருக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக இதற்காகும் செலவுக்கு — சுமார் ஒரு லட்சம்—தயாராக இருக்க வேண்டும். இத்தனையும் மீறி ரண சிகிச்சை பூரண குணமடைவது சில நேரங்களில் நிச்சயமில்லை. அப்படி ஆனாலும் நோயாளியும் தானம் செய்தவரும் மனநிலை காரணமாகச் சில தொல்லைகளுக்கு உள்ளாவதும் உண்டு !

சிறுநீரகத்தின் முக்கியத்துவத்தை யும் அது பழுதானால் நேரும் இடர் களையும் உணர்ந்தால் குழந்தைப் பருவ முதலே ஆரோக்கிய நற்பழக் கங்களின் அவசியம் புரியும்.

கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

ஆலோசனை: **டாக்டர் பி.பி. சதாசிவம்**

சென்னை தேவிபாரடைஸ் (A.C)
அகஸ்தியா (70 MM) உமா மற்றும் தென்னாடெங்கும்





ஜெயந்தியின்

# சிவகாமியின் செல்வன்

ஈஸ்ட்மென் கலர்

டைரக்ஷன்: C.V.ராஜேந்திரன் தயாரிப்பு: கனக சபை

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# எஃகு நகரம்
# ஒரு பூஞ்சோலை நகரமாகவும் ஆக முடியுமா?

இந்தியாவின் எஃகு நகரமான ஜாம்ஷெட்பூர் ஒரு முன்மாதிரி நகரமாகத் திகழவேண்டும் என்றே திட்டமிடப்பட்டிருந்தது.

''நிழல் தரும் மரங்களைக் கொண்ட, அகன்ற தெருக்களாக அமைத்திட மறந்திட வேண்டாம். ஒன்று விட்டு ஒன்று, துரிதமாக வளர்ந்திடும் வகை மரங்களை நடவும். புல்வெளிகளுக்கும் பூங்காக்களுக்கும் போதிய வசதி செய்திடவும்.''—என்று ஜாம்ஷெட்ஜி டாடா தனது மகன் தோராப்புக்கு எழுதியிருந்தார்.

இன்று ஜாம்ஷெட்பூர் அவ்வண்ணமே உள்ளது—எஃகு நகரத்தோடு ஒரு பூஞ்சோலை நகரமாகவும் பரிமளிக்கிறது.

குடியிருப்பு வீடுகள் கூட, எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் ஜாம்ஷெட்ஜி வெளியிட்ட விருப்பங்களை நினைவில் நிறுத்தி, திட்டமிட்டு அமைக்கப் பட்டிருப்பதோடல்லாமல், இன்னும் விரிவுபடுத்தப்பட்டுக்கொண்டே இருக்கின்றன.





**டாடா ஸ்டீல்**

AIYAPS-TS 5 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)